# 31
# பொறா ஷோக்கு

**லா**இலாஹா இல்லல்லா லாஇலாஹா இல்லல்லா ஓ அவுலா லா இலாஹா இல்லல்லா ஔர் முகம்மது ஔர் ரசூலுல்லா அளவற்ற அருளாளனும் நிகரற்ற கருணையுள்ளோனும் ஈடு இணையற்ற ஒப்பற்ற தனித்துவமுள்ளோனுமாகிய அல்லாஹா தால்லா இன் கருணையைக் கொண்டு இறைவன் ஒருவன் இல்லால் வேறில்லை. அல்லாவின் தூதரும் ஒருவரே முகம்மதுதான் நபி என்றறியுங்கள். 'ஓ' என்ற பாங்கொலியும் வானைக் கிழிக்கும் மஸ்தானின் பேரொலியாக நான்கு புறங்களில் எதிரொலித்தது. தஞ்சாவூர் கீழவாசல் இன்னமும் விழிக்கவில்லை. அந்தகாரம் முற்றிலும் நீங்கவில்லை. சூரியன் மறைத்த இருள்சேர் அல்லாவின் கருணை போலவே நான்கு புறங்களிலும் சுடரொளி வீசி சூரியக் கதிர்கள் மூலம் உலகைக் கொஞ்சம் கொஞ்சமாக இதழ் பிரித்து மடல் அவிழ்த்து ஒளி வெள்ளம் பூச முயன்று கொண்டிருந்தது. அந்த இருளில் இருள் பிரிந்த ஒளியில் கீழ வாசல் அகழ்மேட்டில் வானத்தைப் பார்த்தபடி சாக்கடையின் மேல் நின்று கொண்டு இடுப்பில் கை கொடுத்து முதுகை நிமிர்த்தி வானத்தைக் கண்களாலேயே துழாவிப் பார்த்துக் கொண்டு நின்றார் காசீம் மொகைதீன் ராவுத்தர். நூற்றி ஆறு வயது ராவுத்தருக்கு. நம்ப முடியாது யாராலும். தலையில் உள்ள துருக்கி குல்லா விழுந்து விடுமோ என்ற பயம் பார்ப்பவர்களுக்கு இருக்கும். எதைக் கொண்டு அது பிடிப்பில் இருக்கிறது? உறுதி சொல்வது கடினம். தலையில் எப்போது எடுத்துக் கவிழ்த்தியதோ யாருக்குத் தெரியும்? அது இல்லாமல் அவரைப் பார்க்கவே முடியாது. தலையைச் சுற்றிலும் லேசான வழுக்கையும் அடர்த்தியான முடியும் யாரும் அறுபத்தி ஐந்து வயதிற்கு மேல் சொல்ல முடியாது. வில் போன்ற தேகம். எட்டு வயதில் குமரைத் தூக்கி வந்தவர்களோடு தஞ்சாவூருக்கு வந்தது. ஏதோ கனவுபோல் ஞாபகம் இருக்கிறது ராவுத்தருக்கு. ஒரு பக்கம் பிழிந்து போட்ட சக்கை போன்ற உடல். இன்னொரு புறம் ஒரு செழிப்பு ஆச்சரியமானது. வற்றிய உடலானாலும் நீரோட்டம் குறையாத தேகம். வானத்தையே பார்த்துப் பார்த்துத் தீட்டிக் கொண்ட கண்கள். குச்சி குச்சியான விரல்கள். ஆனாலும் சிற்பக் கலைஞனின் விரல்கள் போன்ற அழகு ரகங்கள். சிவந்த தேகம். ரத்தம் செத்ததனால் வெளிறிய சருமம். ஒன்றை ஒன்று போட்டியிட்டன. சாக்கடையின் விளிம்பில் ஓராள் ஆழத்திற்குக் 'கோ'வென்று பாயும் சாக்கடை நீரை காசீம்பாய் பார்க்கவில்லை. அல்லாவின் பாங்கொலியை அவர் செவிகள் கேட்கவில்லை. உதடுகள் லாஇலா என்று உச்சரித்தாலும்கூட வெளியில் ஒலி எழுப்பவில்லை. அவரது தேகம்தான் அங்கு நின்றது. கண்கள் வானத்திலே பூரணமாய் இன்னும் இருள் விலகாத புகைக் குழம்பிடையே யார் கண்ணுக்கும்

எட்டாத எதையோ தேடிக் கொண்டு இருந்தது. அந்தக் கண்களில் ஏதோ ஒரு வெறி. அடங்கமாட்டாத ஆர்வம். அடக்க மாட்டாத துணிச்சல் யாவும் வானத்தை நோக்கி கூரான ஏதோ ஒரு அவயம் அவர் முகத்திலிருந்து புறப்பட்டு வானில் துளாவுவதான தோற்றம். இதைப் பார்க்கும் யாருக்கும் தோன்றும் அந்தக் கண்களில் தெரியும். தீச்சுடர் ஜுவாலை வீசியது யாருக்குத் தெரியும்? நூற்றாண்டுகளாகப் புழுதி புரண்ட அந்தத் தஞ்சை மண்ணுக்கு மட்டுமே தெரியும். கொடூரமான புழுதி. கீழவாசல் மேடு இருளில் தெரியும் பள்ளிவாசல். காதர் மியான் தைக்கால் மேடு - கண்ணுக்கெட்டிய வரை தெரியும் கீழவாசல் அகழ்மேட்டுத் தண்ணீர். காலைநேரத்தில் சூரிய ஒளியில் அந்தச் சாக்கடை நீரில் துள்ளும் கருப்பு ஜிலேபிக் கெண்டை மீன்கள். அவற்றின் பாரம்பரியத்திற்கு காசீம் மொகைதீன் ராவுத்தரைத் தெரியும். எத்தனையோ ஆண்டுகளாக அவைகள் குஞ்சுகளாகவும் முட்டைகளாகவும் மீண்டும் பெரிய ஜிலேபிக் கெண்டைகளாகவும் மாறி மாறி உருமாறி வரும் அந்தச் சாக்கடை கும்பி மீன்களுக்கு ராவுத்தரைத் தெரியும். வானத்தைப் பார்த்து ரத்தத்தால் துழாவி அறிய முயலும் அவரது ஞானம் எட்டாதது. உயர பறந்து போனது. காலம்கூட அவரைச் சிதைக்க முடியவில்லை. தூரத்தில் 'வாப்பா வாப்பா வரியா இல்லையா' என்ற கூக்குரல் கேட்டுக் கொண்டே இருந்தது. ஆனால் தூரத்தே மாடுகள் வெட்டப்படுகிற குரூர ஓலம் ஆரம்பிக்கும் முன்னதாக குவாட்டர் ஹவுஸ் பணியாளர்கள் கத்தக் கத்த மாடுகளை இழுத்துச் சென்று கொண்டிருந்தார்கள். அதையும் காசீம்பாய் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. இன்னும் சிறிது நேரத்தில் வெட்டப்பட்டு விடுவோம் என்று அந்த மாடுகளுக்கு எப்படித் தெரியுமோ தெரியாது. தீனமான அந்தக் குரலே ஒரு தனி பாஷையாக இருந்தது. உலகம் விழிக்கும் முன்பு ரத்தம் ஓடையாகி ஓடுவதற்கு முன்பாவே தனது இனத்தின் அவலக் குரலை அவை எழுப்பின.

''வாப்பா வாப்பா வந்து தொலையிறயா இல்லையா. உன்னோட இதே தொல்லையாப் போச்சு. துனியா தர்கீர் இப்படி இருக்கு- வந்து தொலையேன். எமனத்தாலி தொலஞ்சாலும் பரவாயில்ல. அல்லா உனக்கு இது நல்லாயிருக்கா? பாரேன் நெட்டுக் குத்தா நிக்கறதே, அப்பான்னு கால் வலிக்குதேன்னு சொல்லி உட்காரமாட்டாங்களா மனுஷாளு'' என்று பள்ளத்திலிருந்து குரல் அபயமாய் எழுந்தது. காசீம் ராவுத்தர் அதையும் கவனித்துப் பார்க்கவில்லை. அவர் காதுகள் செவிடுபட்டிருந்தன. புலன்கள் யாவும் இருண்டு ஒளியாக மாறி அவர் முகத்திலிருந்து வானத்தை நோக்கி நீண்டிருப்பதான விபரீத அர்த்தம் அந்தத் தஞ்சைப் புழுதிக்குத்தான் தெரியும். அவரைப் போலவே நூற்றாண்டுப் புழுதி அது. ............ இருநூறு வருடங்களுக்கு முன்பு தஞ்சைக்குள் நுழைந்த மாலிக்காபூரின் படை துரத்தித் துரத்தி அடித்துத் தஞ்சாவூர் மக்களின் உடுதுணிகளையும் சேலைகளையும் பிடுங்கி முதுகில் கொறடாவால் ஒவ்வொருவருக்கும் ஒரு முத்திரை போட்டுவிட்ட ரத்த அடையாளம் கொள்ளை அடித்துச் சென்ற

கோடிக்கணக்கான கோயில் சொத்துகள் இதே அகழ்நீரில் மிதந்த நூற்றுக்கணக்கான பிராமண உத்தமர்களின் சடலங்கள் பின்னர் விரட்டி வந்த காலத்தில் மூன்றரை லட்சம் போர் வீரர்களோடு தஞ்சையைச் சூறையாடிய மாதவராவ் சிங்ளே அவனைத் தொடர்ந்து இந்தப் புழுதி மண்ணை நோண்டி இதில் ............ கழுதை கட்டி ஏர் உழுது விளைச்சலைப் பார்த்து மறுபடியும் உழுது தஞ்சை மண்ணைப் பூண்டற்றுப் போக பிராமணர்கள் சொல்லிய வானகத் திணையின்படி குலநாசம், ஸ்தலநாசம், பூமிமாதா நாசம் செய்த மாறவர்மன் சுந்தரபாண்டியன் ஆடிய ஆட்டம் அந்தப் புழுதிக்குத் தெரியும். வரலாற்று ஆசிரியர்கள் உணர மாட்டார்கள்.

அடுத்துக் குறுக்கில் வந்த ஹைதர் அலி ஸ்ரீரங்கப்பட்டணத்தில் இருந்து திண்டுக்கல் வழியே தஞ்சையைக் கவிழ்க்க பாய்ந்து வந்த முஸ்லீம் படைகள் அங்கே தஞ்சையில் வெடித்துச் சிதறிய பீரங்கிக் கங்குகள் தஞ்சை பலமுறை சுடுகாடாகி வந்ததெல்லாம் விற்றுப் பறித்ததை எல்லாம் தின்று, சாலையோரத்துப் புளியமரத்தில் இருந்த புளியைக் கரைத்துக் குடித்து இந்த அகழ் தண்ணீரில் இறங்கி எத்தனை பெண்கள் மானமிழந்த உடல்கள், எத்தனை நூற்றாண்டுகளாக மிதக்கின்றன. 'ஹோ' என்று அலறும் காளியின் நர்த்தன வீரியம் நூற்றாண்டுகளுக்குப் பின் இன்னும் தஞ்சையில் சுடர்விடுகிறது.

நூற்று இருபத்தியொரு பள்ளிவாசல்கள் ஒருபுறம் பாங்கொலி எழுப்ப ஒரு நேரம் நகராவின் பேரிடி ஓசை லாஇலாஹா கூக்குரலும் தொடர்ந்து மருட்டும் இருளும் தஞ்சையின் நிசும்ப சூதினியாகிய ராவுகால காளிகளும் சம்மதம். இது ராவுத்தருக்குத் தெரியும். ஒரு நூற்றாண்டாக அவர் காளியமர்த்தனத்தையும் வானத்தில் பார்த்துக் கொண்டே இருக்கிறார்.

மூவிலைவேல் சுடரொளி வீச எடுத்த பாதத்தின் கீழ் அரக்கன் நசுங்க நாக்கு மடித்து ரத்தம் சொட்டும் வளையீற்றுப் பற்கள் கோரம் சிரிப்பொலி எழுப்பும் குரல்வளை நொறுங்கும் வைரச் சிதறலால் காளியின் பேருருவம் வானுக்கும் பூமிக்குமாய் இடித்துச் சிதிலமாகிக் கிடக்கும் தஞ்சை அரண்மனை சுவர்களின் மேல் சாக்கடை நீரின் சுழற்சிக்கப்பால் கண்ணுக்கெட்டியவரை பரந்து கிடக்கும் ஆழமான அகழ்நீரில் அல்லாவின் கருணையாக உலகம் என்றும்போல் மீண்டும் மீண்டும் அதுவதாகிச் சுழல்வது தஞ்சை மண்ணுக்கு மட்டுமே எட்டும்.

காசீம் மொகைதீன் ராவுத்தர் அவரது ரத்த நாளங்களில் எதிரொலிக்கும் அத்தனையும் வானத்திலே பூசிப் பார்த்துவிடும் சாதுர்யம். 'வாப்பா வாப்பா' என்ற கூக்குரலுக்குச் செவி சாய்க்காத அந்தக் குரூரமான இன்பம் அவர் முகத்தில் மேலும் ஒளியைப் பாய்ச்சியது. அப்படி வானத்தில் என்னதான் பார்க்கிறார்? ரம்லத்துக்குத் தெரியும். அவள் கையிலிருந்த இரும்பு பிஞ்ஞானத்தில் கொழுப்பு நிறைந்த டீ தளும்பியது. பள்ளத்தையே திரும்பிப் பாராமல் வானத்தையே துழாவும் வாப்பாவையே இப்போது கருணையோடு பார்த்தாள் ரம்லத். ரம்லத்தின் கண்களில் லேசாக நீர் கலங்கியது. இவர் ஏன்

உயிருடன் இருக்கிறார்? யாருக்காக எதற்காக காசீம் ராவுத்தர் இருக்க வேண்டும்? அவளது நெஞ்சம் பாரத்தால் விம்மியது.

மேடேறிப் போய் வழக்கம்போல அவரை மடியில் உட்கார வைத்து இந்த டீயை ஊற்றிவிட வேண்டும்தான் வேறு எதையும் சாப்பிடமாட்டார். எழுபத்தி ஐந்து வயதில் காசீம்பாய் பண்ணிக் கொண்ட நிக்காவில் பிறந்தவள்தான் ரம்லத். பதினெட்டு வயதுதான் ரம்லத்துக்கு. இடையில் சிலகாலம் அவரது பீவி அவரைவிட்டு ஓடி இருந்தாள். திரும்பவும் அவளே ஓடிவந்து காசீம் பாயிடம் சேர்ந்து கொள்ள என்ன இருந்தது அவரிடம்? ரம்லத்துக்கும் அது புரியாத ரகசியம்தான்.

உம்மா ஜைத்தூன்பீ வாப்பாவைக் கட்டும்போது அவளுக்கு ரம்லத்தின் வயதுதான். ஜைத்தூனை காசீம்பாய் மெஹர் கொடுத்துக் கட்ட முடியாத குமர் என்பதால் இலவசமாகவே கொடுத்தார்கள். காசீம்பாய் அப்போதும் வானத்தைப் பார்த்துக் கொண்டேதான் நிக்காஹக கித்தாட்டில் கையெழுத்துப் போட்டார். குமரிகள் எல்லாம் சேர்ந்து கொண்டு "உன்ன கிளவனுக்குக் கட்டி வச்சிட்டாங்கடீ" என்று அவள் காதில் ஓதினார்கள். அன்றிரவே சைக்கிள் கடை மஸ்தானுடன் ஜைத்தூன் ஓடிப்போனாள். மஸ்தான் ரொம்ப நாளாக வைத்திருந்த குறி ஜைத்தூன். எல்லாப் பெண்களைப் போலவும் ஜைத்தூனும் ஒரு ராஜகுமாரனைத்தான் கனவு கண்டாள். கீழ வாசல் துலுக்கத்தெரு கடைசியில் இருந்த நவாமியான் பள்ளிவாசலில் பாங்கு ஓதிக் கொண்டிருந்த ஹையத்பாய் பெற்றெடுத்த பெண் ஜைத்தூன். பாங்கு ஓதிஓதிக் குடலில் புண் வந்து பீடிப்புகையும் தீத்தண்ணீருமே மருந்தாய் வாழ்ந்த ஹையத் ஒருநாள் மையத்தில் வாய்பிளந்துபோனார். காலையிலும் மாலையிலும் அல்லாவின் பெயர் சொல்லிக் கூக்குரலிட்ட அந்தக் குரல் ஒடுங்கிப் போனது. பள்ளிவாசல் மீசான்கல்லில் அவர் சடலம் கிடந்தது.

ஜைத்தூனின் உம்மா பதினொரு குமருகளை விட்டுட்டு 'போனீஹளே' என்ற ஜைத்தூனின் உம்மாவின் கதறலின் எதிரொலி அங்கே ஒரு நூற்றாண்டாக உறங்கிக் கிடக்கும் நவாமியான் பகீர் கேட்டு அதிர்ந்து போய்விடவில்லை. தர்காவின் தூண்கள் ஒரு வேளை அழுதிருக்குமோ என்னவோ?

தினமும் தள்ளாடியபடி அந்தத் தூண்களுக்கு உள்ளே உள்ள படிகளின் மூலம் மேலேறிச் சென்று தஞ்சாவூரின் நான்கு திசைகளும் அலற லாகுலாஹா சொல்லும் ஹையத்தின் குரல் அழுதிருக்குமோ என்னவோ? பக்கத்திலிருந்த கபாஸ்தான் ஒருவேளை சிரித்திருக்கக் கூடும். அங்கிருந்த ஆத்மாக்கள் மலக்குகளாகி வரும்பொழுது அவற்றுக்குள் ஹையத்தும் இருப்பார். பதினொரு குமருகளும் சிதறி யார் யாருடனோ வாழ்க்கை நடத்த அவர்களாகவே தீர்மானித்த நரகங்களில் போய்ச் சிக்கிக் கொண்டார்கள். ஜைத்தூன் கடைசிப் பெண். அவளை யார் கையில் கொடுப்பது? ஜைத்தூனின் அம்மா சந்தேகமே படாமல் ஜைத்தூனை காசீம் ராவுத்தருக்குக் கொடுத்தாள். ஏன் என்று அவளுக்கே தெரியாது.

கீழவாசல் மார்க்கட்டுக்குப் போகும்போது ஒரு நாள் தற்செயலாக வானத்தைப் பார்த்தாள் ஜைத்தூனின் உம்மா. தன்னந்தனியே கோட்டை வாசல் மேலே மதில்மேலே நின்று வானத்தோடு அளவளாவிக் கொண்டிருந்த காசீம் ராவுத்தரை அல்லாவின் உருவமாகவே ஒளிப்பிழம்பாக அவள் பார்த்தாள். இந்த மனுசன் என்னங்கிறே எப்போதும் நீண்ட தாடி காற்றில் கொடியாய்ப் பறக்கணும். வானத்தை நிமிர்ந்து பார்த்த தலையிலிருந்த குல்லாய் கீழே சரியாமல் இருக்கும் விந்தையை ஜைத்தூனின் உம்மா பலமுறை கடைத்தெருவில் குமருகளிடம் பேசி இருக்கிறாள். என்றாலும் ஜைத்தூனை அவர் கையில் பிடித்துக் கொடுத்தபோது தெருவில் எல்லோரும் மண் வாரித் தூற்றினார்கள்.

'வேற ஆள் கெடைக்கல்லயா ஒனக்கு?' என்று சொக்கட்டான் உருட்டினார்கள். 'எனக்கு அவரு மலக்குதான். மூத்தவளும் கடைசிக்கு முந்தினவளும் செறுக்கியும் சொல்லாமலே ஓடிப்போறாளுக. நாலாவதும் எட்டாவதுமா படிச்சிட்டு இருந்தவளுகளே அறாம் படிச்ச பயலுக தேடிக்கிட்டாளுக. தெனமும் சோத்துக்கு பறக்கற பறப்புலே மிச்சம்மீதி சந்து, களிசல் கருவாடு விக்கப் போனதும் பளய பாத்திரம் பளய பேப்பர் பொறுக்கப் போனதுகளும் சாணி அள்ளப் போனதுகளுமா படச்சவனே அல்லா இதுதான் நீ கொடுத்த வாழ்க்கை. விவரந் தெரிஞ்சி அவள ஒருத்தன் நிமிண்டறதுக்கு முன்னாலே ஒரு கொட்டிலே அடைக்கணும் அல்லா என்று பதறியபடி ஒரு நாள் கோட்டை மதிலேறினாள். ஜைத்தூனின் உம்மா காசீம் ராவுத்தருக்கு பசிக்கவே பசிக்காதோ கையிலிருந்த அலுமினியத் தூக்கில் அவருக்காக கறியும் ரொட்டியும் கொண்டு போனாள்.

''மருமவனே இத சாப்பிடுங்க'' என்றாள் ஜைத்தூனின் உம்மா. ''அப்படி வச்சிட்டுப் போ'' என்றார் முதன் முறையாக காசீம்பாய். ''ஊஹூம் நாளக்கி வந்து பாத்தா அப்படியே இருக்கும்''. ஒருநாள் சம்பளம் இதிலே ரொட்டியா கறியா இருக்கு. வயசான காலத்திலே ஏன் இப்பிடி நின்னு நின்னே வறண்டு போறீக! என் பொண்ணு ஜைத்தூனை நிக்காஹ் பண்ணிக்குங்க. ஆம்பள இல்லாத குடும்பம் எல்லா பயலும் பொறுக்கிப் பயலுங்க. எம்பொண்ணுக அத்தனையும் தெருவிலே நிக்குது. ஜைத்தூன் 17 வயசு குமர். அவளுக்கு நெனவு தெரிஞ்சா எனக்கு வாண்டாம்பா. அதுக்கு மிஞ்சி அவளக்கெட்டி ஒரு குட்டியும் போட்டீங்கன்னா பாதுகாப்பா ஆயிரும். அல்லா பேரச் சொல்லிப் பாடின எம் புருஷனுக்கு இந்த கதி வரலாமா சொல்லுங்க!'' கலகலவென்று சிரித்தார் காசீம் மொகைதீன் ராவுத்தர்.

அவர் கருணையோடு அவளைப் பார்த்தார். தாடியை உருவியபடி ''எனக்கு நிக்காவா? பதினேழு வயசா? ஒம் பொண்ணா? எனக்கு வானத்தைப் பாக்கவே நேரமில்ல.'' அலுமினிய மூடியைத் திறந்து பார்த்தார். செவ்வையாகத் தேங்காய் அரைத்து கொழுப்பு உருக்கி பெரிய பிரபுக்கள் வீட்டிலும் செய்யாத விதமாய் மணம் வீச கறி வறுத்திருந்தது. நீலச் சிவப்பு நிறத்தில் எண்ணை சொட்ட கறியின் மணம் அவரைத் தாக்கியது. அவர்

மனைவி இறந்தபின் அவரிடம் பல வருடங்களாக யாரும் நெருங்குவதே இல்லை. பள்ளத்தில் துலுக்கத் தெரு சரிவில் இருந்த பள்ளிவாசல் பின்னால் இருந்த வீடு ஒன்றுதான் அவர் வகையில் மிச்சம். அந்த வீடும் கடனில் மூழ்க இன்னும் கொஞ்சநாள்தான் இருந்தது. யாருமில்லா அந்தக் கணம் அவரை பயமுறுத்த முடியாது. வானம் என்ற ஒன்று இருக்கும்வரை நிமிர்ந்த நோக்குடன் வானத்தைப் பார்த்துக் காலம் ஓட்டிவிடுவார் ராவுத்தர்.

''உம்மா உம்மா எங்க உன்ன ரொம்பநேரமா காணம்'' என்றபடியே கோட்டைக் குத்துச் செங்கல் வழியாக ஏறி அநாயசமாக ஓடி வந்தாள் ஜைத்தூன். வானத்தைத் தவிர வேறெதுவும் பாராத அவரது கண்கள் அல்லா ஹூத்தாஸின் கருணையால் முதல் முறையாக ஜைத்தூனை ஊன்றி நோக்கின. உம்மாவின் முதுகின் பின்புறம் நின்றவளைக் கையைப் பிடித்து வெளியே இழுத்து விட்டாள் ஜைத்தூனின் அம்மா. காசீம்பாய் ரத்தம் திடீரென சூடேறியது. இவளா, இவளையா, இவளுக்கா, விதியா? என்ற அலை நெஞ்சில் மோத அடப்பாவமே என்றன அவரது உதடுகள். ஆனால் அவரின் நாசித்துவாரங்கள் விரிந்தன. பெருமூச்சு சீறியது. உள்ளுக்குள்ளே இருந்த ஏதோ ஒன்று கபாடம் திறந்து கொண்டது. விரிந்த வான நிலத்தில் சூரியன் போல் கண் கூசியது.

கருப்புக் கிழிசல் ஜாக்கெட்டும் வெள்ளை பர்தாவும் அந்தப் பெண்ணுக்கு எப்படி இத்தனை இறுக்கமாகச் சுற்றிக் கொண்டன. ஆம் ஏதோ ஒரு சக்தி அவள் கண்களைக் கூர்ந்து நோக்கியது. ஜைத்தூன் மேலும் உள்ளே மறைந்து நின்றாள். ''அத்தாவுக்குத்தான் உன்னயக் கட்டிக் கொடுக்கப் போறேன். முன்னாலே வா. அவர் பாக்கட்டும்'' என்றாள். என்ன நடக்கிறது என்றே தெரியாமல் மலங்க மலங்க விழித்தபடி கைகளைத் தொங்கவிட்டாள் ஜைத்தூன். காதோரம் முடி சுருளைகளாக வியர்வையில் பேரழகு சிந்தின. வெறும் கழுத்தில் இருந்த கறுப்புக் கயிறு மார்பிலிருந்த ஒரு ஒற்றைப்பரு கருப்பில் முட்டியபடி பிரிந்து கொடுத்தது. அந்த 75 வயது கிழவரெ இல்லை என்று சொல்லவிடவில்லை. அலுமினியம் மூடியில் ரொட்டியை எடுத்துக் கறியில் தோய்த்து வாயில் திணித்து அவளையே பார்த்தபடி ''எங்கிட்ட என்ன இருக்குன்னிட்டு இவளக் கட்டறேங்கறே'' என்று கேட்கும் முன் ஜைத்தூனின் உம்மா அவள் கையைப் பிடித்து 'இந்தாங்க பிடிங்க' என்று ஒப்படைத்தாள். கறியின் மணமும் சுவையும் ஜைத்தூனின் சாகசமும் சாதுர்யமும் ஒரே நேரத்தில் அவரை அமுக்கி அடித்ததைவிட ஜைத்தூனின் பேரழகு அவரை மீண்டும் பூமியைப் பார்க்க வைத்தது. பூமி சிவந்தது. இரண்டு பெண்களும் அவரைச் சூழ்ந்து இறுக்கிய அந்த மாலையிலிருந்து அவர் தப்ப முடியவில்லை. எல்லோரும் கேலி பேச நிக்காஹ் நடந்தது.

ஏன் என்று தெரியாமலே அவரிடம் அவள் வந்து சேர்ந்தாள். ஆனால் அன்றிரவே மஸ்தானுடன் ஓடிப்போனாள். இது இங்கே உள்ள பெண்களுக்கு ஒன்றும் புதிதல்ல. மஸ்தான் அவளைக் கேரளத்தில் கொண்டு போய் விற்றான். அவளுக்கே அது தெரியாது. பாஷை தெரியாத ஊரில் ஜைத்தூன்

மஸ்தானிடமிருந்து விற்ற கதை கேட்டு பதறிப்போனாள். நான்கு ஆண்கள் எமகிங்கரர்கள் போல் அவளைத் தூக்கிச் சுவற்றில் மாட்டினர். இரவு வெகு நேரத்திற்குப் பின்னர் நினைவு திரும்பிய போது அவள் ஒரு முந்திரி வேனில் போய்க் கொண்டிருந்தது தெரிந்தது. அவள் சுத்தமாக வேறு ஒருத்தி ஆகி இருந்தாள். இனி பயமில்லை. முந்திரி மூட்டை மேலிருந்த வெட்டுக் கத்தி ஒன்றைக் கையில் எடுத்துக் கொண்டு ஓடிக் கொண்டிருந்த வேனில் இருந்து கவலையே படாமல் குதித்தாள் ஜைத்தூன்.

நடந்து நடந்து ஒரு பள்ளி வாசல் வாயிலில் வந்து வீழ்ந்தாள் ஜைத்தூன். அங்கிருந்து நாலு உத்தமர்கள் அவளை ரயிலேற்றி அனுப்பினார்கள். வரும்பொழுதே நேராக காசீம் ராவுத்தர் கிட்டதான் வரணும் என்று தோன்றிவிட்டது. அவளுக்கு இனி அத்தா போதும். இனி எங்கும் யாருடனும் போவதில்லை என்ற தீர்மானத்துடன் பத்துநாள் பட்டினியுடன் உடல் முழுவதும் அடியும் உதையும் வாங்கிய கன்றிப்போன புண்களுடன் காசீம் மொகைதீன் ராவுத்தர் திறந்த வீட்டிற்குள் இருண்ட திண்ணையின் வழியாக ஏறி யாருடைய சம்மதத்தையும் கேளாமல் மீண்டு வந்து புகுந்து கொண்ட அவளை யாரும் ஏதும் கேட்கும் முன்னமே சேர்த்துக் கொண்டார் காசீம் மொகைதீன் ராவுத்தர். இதுதான் ரம்லத் பிறந்த கதை. ரம்லத் வயிற்றில் உருவாகும் வரை ஜைத்தூன் அவளைச் சுத்தமாகப் பெற்றெடுக்க தீர்மானம் செய்து கொண்டே பெற்றெடுத்தாள் ஜைத்தூன். சுத்தமான ராவுத்தரின் ரத்தத்தில் அவளைப் போன்ற உருவமாகவே பிறந்தாள் ரம்லத்.

வானளாவிய சுவர்கள். ராமர் செங்கற்களால் கட்டப்பட்ட புராதனச் சுவர்கள். கீழே செம்பாரங்கற்கள் மீது எந்த பிடிப்பில் அவை நிற்கின்றனவோ? தஞ்சாவூரின் கீழ வாசல் கோட்டை முழுக்க பள்ளம் முழுவதும் முஸ்லீம்களால் நிரம்பியிருக்கின்றன. கீழக்கோட்டை வாசலிலிருந்து நீண்ட சரிவான பாதை இருபுறங்களிலும் அகழிநீர் அலையடித்துக் கொண்டிருந்தது. கோட்டை இப்போது கோட்டையல்ல. நாயக்கர் தெலுங்கர் வடுகர் என்று வந்தேறிகள் வந்து சூழ்ந்த நூற்றாண்டுகள், கழிந்தே போயின. இன்றும் கோட்டைச் சுவர்மீது பன்றிகள் மேய்கின்றன. கீழவாசல் மேட்டு சுவரின் நீட்சியில் ஒரு சிறிய மேடு. அதுதான் பீரங்கிமேடு, பிரம்மாண்டமான பீரங்கி நூற்று இருபத்தைந்து அடிகளுக்கும் மேல் நீண்ட பெரிய பீரங்கி மேட்டில் பல நேரம் வெய்யிலில் குளிர் காய்ந்துகொண்டு பீடியை உறிஞ்சி ஊதிக் கொண்டு அதோ காசீம் முகைதீன் ராவுத்தர்.

வானத்தைப் பார்த்துக் கொண்டேயிருக்கும் அவரைத் தேடி வழக்கம்போல் ரம்லத் வந்து பீரங்கி மேட்டின் கோட்டைப் படிக்கற்கள் வழியே மேலேறி வந்தாள். கீழ் அலங்கம் மேலிருந்து வளைந்து வளைந்து தெரிந்தது. பல வீடுகளின் கூரையிலிருந்து காலைச் சமையல் புகை எழும்பி மணந்தது. பச்சை மிளகாய் உப்பு கலந்து அம்மியின் ஙிக்ஙிக் என்ற ஓசையும் மேலெழுந்து வீசும் தேங்காயின் பூரணமான வாசனையை நுகர்ந்து "வாப்பா! இந்த டீயெக் குடிங்க" என்று அவரை நெருங்கி அவரது தோள்களுடன் இணைந்து நின்று நெஞ்சைத் தடவிக் கொடுத்தாள் ரம்லத்பி.

வானத்தையே பார்த்துத் துருவிக் கொண்டிருந்த காசீம் முகைதீன் பாய் அவளையே உற்றுப் பார்த்தார். காலை பனி கொட்டிக் கொண்டிருந்தது. பனிப்புகையின் தீவிரத்தில் அந்த இரும்புப் பிஞ்ஞானத்தில் இருந்த ஒரு மிடறு உள்ளிறங்கியதும் ஆவி பறந்து திருப்தியாகவே ரம்லத்தைச் சந்தோஷமாகப் பார்த்தார் காசீம்பாய். இந்த டீயோடு அப்புறம் காசீம்பாயைக் கண்டு பிடிக்க முடியாது. எங்கே போவார் எங்கிருந்து வானத்தைப் பார்த்துக் கொண்டிருப்பார் என்று யாரும் சொல்லவே முடியாது. உணவு அறவே கிடையாது. யார் கொண்டுபோய் கொடுக்கக் கூடும். திடீரென்று யாராவது திருவையாறு போகும் பஸ் டிரைவர் முஸ்லிம் ஜனம் பிடித்துக் கொண்டு வந்து விட்டு விட்டுத் திட்டுவார்கள். "குலமங்கலம் ரூட்ல பஸ்ல போய்ட்டிருந்தே. காசீம்பாய் ஆத்தங்கரை மலத்துல கால்வெச்சு நின்னுட்டிருந்தாரு. பிடிச்சு இழுத்துட்டு வாரதுக்குள்ள போதும் போதும் என்று ஆய்ருச்சி. வீட்ல போட்டு மூடிவைய் நானியம்மா" என்பான் அந்த ட்ரைவர். கீழ வாசல்காரர்கள் பிடித்து பத்திரமாகக் கொண்டு வந்து விடுவார்கள் என்றாலும் உடனே வெளியே புறப்பட்டு விடுவார். ரம்லத்தை ஒத்த குமருகள் வந்து பிடித்து திண்ணை மீது அவரை ஏற்றி உட்கார வைத்து குசலம் விசாரித்து உள்ளே அடைப்பார்கள். ஆனால் சித்த நேரத்தில் யாராவது வந்து ரம்லத்திடம் சொல்வார்கள் காசீம் பாய் கலக்டர் ஆபீஸில் புறாக்கூண்டு அருகே நின்று அழகைப் பரிசீலித்துக் கொண்டு இருப்பதாக. ரம்லத் இன்று நேற்றா இவற்றைப் பார்க்கிறாள். ரெண்டு நிமிடத்தில் மறந்து விடுவார். வெளியே ரெயில்வே ஸ்டேஷன் தஞ்சாவூர் கெடியாஸ் போய் நிற்பார் காசீம் மிகைத்தீன் ராவுத்தர். தஞ்சாவூர் ரயில்வே ஸ்டேஷன் உள்ளே மாலை நேரத்தில் அவருக்கு ஏராளமான பறவைகளுடன் பார்வையும் பழக்கமும் இருந்தது.

யாராவது பிடித்து இழுத்துக் கொண்டு போவார்கள். பைத்தியம் போல கூடவே போவார் காசீம்பாய். எல்லாருக்குமே கிழவன் என்ற பரிவு. அவரோ வானத்தைப் பார்த்துக் கொண்டே இருப்பார். பசிதாகம் இராது. காலநேரம் தெரியாது. முன்பெல்லாம் இது சுலபமாய் இருந்தது. இப்போது தத்கீர் மாறி விட்டிருந்தது. "ஏம்பாபா! எஞ்ச இப்டி சுத்திக்கிட்டிருக்கீங்களாம்?" யாராவது கேட்பார்கள் "பொறா ஒண்ணெக் காணும்ப்பா!" வாயிலிருந்த பீடி எடுபடாமலே பதில் சொல்வார் காசீம்பாய்! கேட்பவர்களுக்கு ஆச்சர்யம். இந்தக் கிழவருக்குத்தான் எத்தனை தீர்க்கமான பார்வை! கண்கள் சிவந்து வயதுக்கு மீறிய வேகம் காட்டும் யாரையும் அசத்தும் பார்வை காசீம்பாயுடையது.

இரவு வேளைகளில் ஜைத்தூன் அவரைத் தேடி அலைந்து இழுத்து வந்து தன் மடியில் போட்டுத்தான் தூங்க வைப்பாள். இப்போது ஜைத்தூனும் உயிருடன் இல்லை. காசிம்பாய் பெரிய அதிருஷ்ட்டக்காரர்தாம். எங்கோ ஓடிப்போய் சிக்கி எவனோடோ மாடுபோல் பிடிபட்டு தப்ப முடியாத வலையில் இருந்தும் தப்பிவந்த போதும் காசீம்பாய் அவளை ரோசப்பட்டு துரத்தி விடவில்லை. தெருவிலும் கீழவாசலிலும் பேசாத பேச்சு பேசி

மண்வாரித் தூற்றிய போதும் ஹாஜியார் அப்துல் சலாம் ராவுத்தர் கூப்பிட்டு அவளைத் துரத்து. தலாக் கொடுத்து அடித்து விரட்டு என்றெல்லாம் கண்டித்த போதும் காதிலேயே போட்டுக் கொள்ளவில்லை. காசீம் பாயிடம் வந்து கதறிய ஜைத்தூனை வீட்டுக்குள் வைத்துக் கொண்டதும் ஜைத்தூன் துணிச்சலே வடிவாய் நிமிர்ந்தாள். அடுப்பு பற்ற வைத்து நோம்புக் கஞ்சி காய்ச்சினாள். காசீம்பாய் காலடியில் உட்கார்ந்தபோது ஈரம் படிந்த விழிகளோடு ஜைத்தூனை தடவிக் கொடுத்தார். பெரிய வீடு அது. முன்னோர்கள் கட்டிய விசாலம். வீடு முழுவதும் அடித்து வாரித் தூற்றி கூட்டினாள் ஜைத்தூன். அது ஹவ்வால் மாதம். நோன்பு பிடித்தாள். காசீம்பாய் அருகில் உட்கார்ந்து ஓதினாள். இரவு பகலாக அவரைக் கரிசனையுடன் துடைத்து மணம் வீச வைத்தாள். புதிய ஜும்பாக்களைத் துவைத்து உலர்த்தி இஸ்திரி போட்டாள். பைஜாமாக்களைத் தைத்தாள். இரவு கண்ணாடிக் கிண்ணத்தில் பிர்னி கஞ்சி வைத்து ஊட்டினாள். ஜைத்தூனைக் கருணையுடன் பார்த்துக்கொண்டிருந்தார் காசீம்பாய். அவளைத்தான் பீவியாக அவரால் எண்ணவே முடியவில்லை. பீடிக்கங்கு இருளில் சுடர்விட இருவரும் அருகருகே இருந்து கொண்டே இருந்தனர். ஜைத்தூன் பீவியை அவள் உம்மா அழுத்தமாகச் சொல்லி வாட்டியிருந்தாள். அதன்படியே ஒற்றை பைஜமாவில் அவருக்காகக் காத்திருந்தாள்.

''இந்த துனியாவுல அதும் மாதிரி ஆம்பளை சுத்தமான ஆம்பளை கிடையாது. ஜைத்தூன் வயசாச்சேன்னு நெனைக்காதே. சுத்தமான ஆம்பளை. இருபத்தைஞ்சு வருஷமா எனக்குத் தெரியும். ஒன்னையே கெட்டுனது அல்லாவோட கிருபை. தூங்கிடாதே ஜைத்தூனு. அந்த ஆளெ தூங்க உட்றாதே! வேன்னா தெருவுக்குத்தான் வரணும். கெட்டிப்புடி. உட்றாதே! முட்டியடி. வணங்க மாட்டான். வணங்கு. கொடல் கறியும் வெதர் பொரியலும் பண்ணி ஊட்டி ஊடு. கஞ்சி கூட செவுரொட்டிக் கஞ்சிவை. மடியில இருந்து ஊட்டு. அப்பா மாதிரி அம்மா மாதிரிதான். கொஞ்சம் கொஞ்மா எளக்கி மாட்டு. உட்றாதெ-'' உம்மா சொன்னது நெஞ்சில் நின்றது. உண்மைதான். இழக்க முடியாத தூய்மை. காசீம் ராவுத்தர் எழுபத்தைந்து வயது கிழவனை வசப்படுத்தும் வறுமை தாயையும் மகளையும் துரத்தியது. வீட்டுக்கு வெளியே இருந்து உம்மாவும் இரண்டு குமர்களும் காசீம் பாய் வீட்டில் அடைக்கலம் ஆகிவிட்டிருந்தனர். பிறை கண்டதும் ஜைத்தூனின் கண்கள் போன திசை எல்லாம் காவல் நின்றாள் உம்மா. ஜைத்தூனுக்கு ஆம்பளைன்னாலே அசிங்கப்பட்டுப் போயிருந்தாள். காசீம்பாய் வியப்பே வடிவாக்கினார். காலங்கள் சதித்தன. இருண்டு விடிந்தன. மூணு மாசம் கழிந்த போதும் ராவுத்தர் மடியில் தூங்கிக் கிடக்கும் ஜைத்தூண் பீவியை இருட்டில் வந்து அடித்து எழுப்பி துணியையும் உருவி திரும்பி ராவுத்தரிடம் விரட்டும் வேலையும் பயன் தரவே இல்லை.

ஜைத்தூனின் எல்லா முயற்சியும் ஏனோ தோற்றுக்கொண்டுதான் இருந்தன. உம்மா விடவில்லை. ஒரு கொடூரமான இரவு அது. இரண்டு பேரும் காசீம் பாயிடம் வெகுநேரம் பேசிக்கொண்டிருந்தனர். உம்மாவின் மனசில் ஏதோ

சங்கல்பம். ஜைத்தூன் பீவிக்கு ஆம்பிளை உடம்பு என்பது கசந்து போய்விட்டிருந்தது. மண்ணகல் ஒன்றை கொளுத்தி அந்த பழைய வீட்டு உத்தர விட்டத்தில் வைத்தாள் உம்மா. ஜைத்தூனின் கண்கள் திடீரென்று விரிந்தன. ஜைத்தூனின் உம்மாவின் பெயரைச் சொல்லி காசீம்பாய் அரற்றலானார்.

"என்னெ உட்ரு ஷம்ஷாத்து. வாண்டாம். அடிப்பாவி. அடிப்பாவி. உட்றி உட்றி" கண்கள் அகல விரிய அசந்து போனாள் ஜைத்தூன்பி. அந்த இரவின் பரிசுத்தத்தை உடைத்துக் காட்டினாள் ஜைத்தூண்பியிக். உம்மா ஷம்ஷாத்பேகம். இருளும் ஒளியும் தங்கம் போல உருக ஷம்ஷாத் பேகம் காசீம் பாயை உருட்டி எடுத்தாள்.

இப்போது காசீம் பாயிடம் சத்தமே இல்லை. பளீரென்று ஒரு அறை விழுந்தது ஜைத்தூனுக்கு.

" இப்ப போடி போ... போயி உடாதெ!போ" கட்டில் கிழிசல் மெத்தையில் இருந்த காசீம்பாய் முணக முணக ஜைத்தூன் பி தழுவிப் புரண்டாள்.

" ஜன்னத்து! ஏம்பாருவெ குடு. ஏம்பாருவெ குடுத்துரு ஐயப்பா! அம்மா அம்மா" முணகினார். ஜன்னத் அவரோட மொதல் பொண்டாட்டி.

"நானு ஜைத்தூன்பின்னு சொல்றீ புரியட்டும்-" இப்போது காசீம்பாய் புறாவின் வேகம் சூழ ஜைத்தூனை முறுக்கி மெத்தையில் புதைத்தார். முப்பது வருடத்து தேக்கமான அவரது முரட்டுவில் வளைந்து ஜைத்தூனை இறுக்கி சிதைத்தது.

"உம்மா உம்மா உம்மா இஞ்ச வாயேன் வா " கதறினாள் ஜைத்தூன். முறுக்கமும் பிடியும் மூச்சு முட்ட அவளை வளைத்து உள்ளமுக்கினார் காசீம். வானத்தில் அனல் புறாக்கள் சிதறின. இருளில் ஜைத்தூன் முதல் முறையாக இனித்துக் கிடந்தாள். காசீம் ராவுத்தர் ஜைத்தூனை இணைத்தும் பிளந்த முதல் கனவு நிஜமாய் அனல் சுடர்ந்தது. உம்மா சொன்னது நிஜம். நிஜம். முரட்டு ஆம்பிளைதான் அடங்காத ஆம்பளை. ஆச்சர்யமான வேகம். சுடரும் ஆம்பளை காசீம். அரற்றலுக்கு ஜைத்தூனின் உம்மா ஷம்ஷாத் இடமே தராமல் கதவுகளை இறுக அடைத்தாள்.

விடிந்த போதும் ஜைத்தூன் வெளியே வரவில்லை. வரமுடியவில்லை. வரவிடவில்லை. சந்தோஷப் புறாக்கள் அந்த வீட்டைச் சுற்றிப் பறந்தன. காசீம்பாய் மௌனமாகவே உட்கார்ந்திருந்தார். ஒன்பது நாட்கள் ஆயிற்று. அவர் சுய நினைவுக்கு வந்து வெளியே வர. அதற்குப் பிறகும் பத்து நாளாச்சு.

என்ன மாயம்! ஜைத்தூன் கர்ப்பம் ஆகி விட்டதும் உடனேயே தெரிய வந்ததும் சந்தோஷம். தாயும் மகளும் இருந்து சந்தோஷமாக காசீம்பாயை ஊட்டினர் மூன்று மாதம்.

தனியாக ஜைத்தூன் கேட்டாள். "மிந்தி வாண்டாம் வாண்டாம்னிங்களே அத்தா. வயித்த பாத்திங்களா இப்ப"

வயிறு கனிந்து பெருகியிருந்தது. இடுப்பு விரிந்து வெளுத்திருந்தது. காசீம்பாய் முகத்திலும் பரவசம். இப்ப கூட ஒரு பிள்ள வேணும்.

வீட்டுப் பொறுப்பு இப்போ ஷம்ஷாத்து கைக்கு வந்தாச்சு. காசீம்பாயைக் கேட்கமாலேயே இப்போ எல்லாம் நடந்தது. அவர் ஜிப்பாவில் இருந்த எல்லாம் அவரைக் கேட்காமலேயே ஷம்ஷாத் பேகம் எடுத்துக் கொள்வாள். ஒவ்வொரு ஓடிப்போன மகளாக வந்து சேர்ந்து வீடும் பெருகியது. மூணு வேளையும் நிம்மிதி பெரு மூச்சுடன் கானா நடந்தது. இப்போது காசீம்பாய் திண்ணையில் உட்கார்ந்து உட்கார்ந்து இரவில் வெகு நேரம் பீடி ஊதிவிட்டு உள்ளே போகும் போது - இருட்டில் பின் நடையில் ஷம்ஷாத்து அவரைக் கையைப் பிடித்து ஜைத்தூன் அறைக்குள்ளே அனுப்பி அடைப்பாள்.

மகளாகவோ பேத்தியாகவோ பார்த்து பெண்ணின் மடியில் காசிம் பாய் புது உயிர் பிறந்தது ஆச்சர்யம்தான். வளைத்து எடுத்தார்.

பத்தாவது மாதம் இரட்டைக் குழந்தைகளைப் பெற்றெடுத்தாள் ஜைத்தூன்பி. நம்பத்தான் முடியவில்லை. இரண்டும் பெண் குழந்தைகள்.

இரவுகளில் ஜைத்தூன் காசீம் பாயிடம் ஆண் குழந்தை வேண்டும் என்றாள். இரண்டு பெண் போதாதா என்றார் காசிம். ஒன்று ஜனபா இன்னொன்று ரம்லத்பி.

வாழ்க்கை சுலபமாக இருந்தது. சொத்துக்கள் விற்றாகின. வீட்டையும் விற்றாள். மிச்ச மீதி வாழ்க்கை சுலபமாகும். வீட்டை விற்பது சுலபமாய் இல்லை. ஏராளமான கடன் ஏற்கனவே சுமந்திருந்தது.

காசிம் முகைத்தீன் ராவுத்தருக்கு வேலை என்றால் புறா வளர்த்து நோக்குக்குக் கொடுப்பதுதான். தாயும் மகளும் தேடித் தேடி ஓட வேண்டிய நிர்பந்தமும் வந்தது.

அந்தப் பெரிய வீடு கனத்தது. வீடு நிரம்ப பெண்கள். சீலைகள் பர்தாக்கள் தொங்கின. காசிம்பாய் எங்கே எப்போது போவார் என்றும் எப்போது வருவார் என்றெல்லாம் யாரும் சொல்ல முடியாது. வீட்டின் பின்புறம் இருந்த காடி கானா என்ற வண்டி நிறுத்தும் இடத்தில் ஷம்ஷாத் பேகம் மகள்களை விட்டு ஏதோ தோண்டிக் கொண்டிருந்தாள். தரையைப் பேர்த்து எடுக்கும் வேலை நடந்தது. ஜைத்தூன்பி ஆச்சர்யமாகத்தான் கேட்டாள். ''என்ன உம்மா பண்றே?''

நாலு பெண்கள் கையிலும் கடப்பாறை. சத்தமில்லாமல் இடித்து தோண்டி எடுத்துக் கொண்டிருந்தார்கள். எல்லோருக்கும் மூச்சு வாங்கியது. அயரவில்லை. திம்திம் என்று இடித்துத் தள்ளினார்கள். ஷம்ஷாத்து சுற்றிச் சுற்றி வந்து உத்திரவிட்டுக் கொண்டிருந்தாள். இப்போது தரை பளபளத்தது. ஒரு பெண் இடிந்த காரைகளைப் பெயர்த்துக் கூட்டித் தள்ளினாள். மேலும் பளபளப்பு. தங்கம்போல இப்போது தரை ஒளிவிட்டு மினுங்கி டாலடித்ததை ஐந்து பெண்களும் ஆச்சர்யமாய் பார்த்தனர்.

''என்னம்மாது?'' ஏகக்குரலில் வினவியபோது, ''கவர்தார். மூச்சு விடக்கூடாது. உளியும் சுத்தியலும் கொண்டாந்து பேத்து எடுங்க. சத்தம் வெளியே வந்திச்சு அவ்வளவுதான்'' என்றாள் பேகம் ஷம்ஷாத்து. அவளுக்கும் மேல் மூச்சு கீழ்மூச்சு வாங்கியது.

டங் டங் டங் என்று சப்தம் நாலு நாளாக யாருக்கு என்று பதில் சொல்ல. கடைசியாக இடிந்தது.

கீழவாசல் உச்சினிகாளி தெருவிலிருந்து மாய நாடார் வந்தார். ஷம்ஷாத் ரகசியமாகக் கூட்டிக் கொண்டு வந்து பேரம் பேசினாள். இருபத்தையாயிரம் கொடுத்துவிட வேண்டும் என்றாள். மாய நாடாரோ அசந்து போனார். கொல்லைப் புறச் சந்து மூலம் அழைத்து போய் தரையைக் காட்டினாள். மாயநாடார் மூக்கின்மேல் விரல்வைத்து வியந்து நின்று போனார்.

''பொம்புளை செய்த வேலையா இது'' என்றார். தரையில் இருந்து பெயர்த்து எடுத்து சன்னச்சதுரங்களாக தாமிரத் தகடுகள் வெட்டிவெட்டி அடுக்கி, அந்த அறை முழுதும் அடுக்கப்பட்டும் அடேயப்பா இருபது ஆம்பிளைகள் சேர்ந்து செய்தாலும் முடிகிற வேலையில்லை. பத்தாயிரம்தான் தரலாம் என்றார் மாயநாடார். அதுவே அதிகம் ரொம்ப அதிகம் என்றார். ''வாண்டாம்னா உட்ருங்க. நானு விருதுநகர்ல இருந்து ஆளெ வரச் சொல்லி இருக்கேன் வித்துக்குவேன்'' என்றாள் ஷம்ஷாத்து.

''ஆமா! போலீசுக்குத் தெரிஞ்சா என்ன ஆவும் தெரியுமா? இதெல்லாம் புதையல் மாதிரி. கவுண்மெந்துல எடுத்துக்கிட்டு போய்டுவாங்க. ஏங்கிட்ட உட்டா பணமாவுது அப்படியே கெடைக்கும்'' என்றார் மாயநாடார். அவர் கண்களின் தீவிரம் அவரே காட்டிக் கொடுப்பார் என்றும் தோன்றியது.

ஷம்ஷாத்து வெளியே பயத்தைக் காட்டாமல் ''ஒரே பேச்சிதான் நாடாரே இருபது குடுத்துடு.''

''ம்ஹூம் பன்னண்டு தரலாம் மிஞ்சி மிஞ்சிப் போனா. அதுவே ரொம்ப அதிகம்.''

''சரி உள்ளாற வா நாடாரே. உனக்கு வாயால சொன்னா தெரியாது உள்ளாற வா.'' மாய நாடாருடன் அறைக்குள் சென்றாள். சற்று நேரத்துக்குப் பின்னால் வெளியே வந்த மாய நாடார் மடியில் இருந்த பணமெல்லாம் உருவி விட்டிருந்தாள் ஷம்ஷாத் பேகம். முகத்தில் வழிந்த வியர்வையைத் துடைத்து விட்டுக் கொண்ட மாயநாடார் ''அஞ்சுக்கு மூணு பழுதில்ல'' என்று சொல்லிக் கொண்டே வெளியே நின்ற துணை ஆட்களைத் தாமிரத் தகடுகளை அள்ள உள்ளே அழைத்தார். இடுப்பில் இருந்த கைலியை இறுக முடிந்தபடி ''குமருக இருக்கிற இடம் பீச்சந்து வழியாக வரச் சொல்லையா'' என்றாள். ஷம்ஷாத்தின் வியர்வை மாய நாடாரின் மூக்கில் மணந்தது. அது அங்கிருந்த குமருகள் ஒவ்வொருவருக்கும் பயம் தந்தது. ஹசினா பீவி பர்தாவை இழுத்து விட்டுக் கொண்டு ''பனமரத்தடி மாதிரி இப்படி ஒரு ஆளு இருப்பானா? கன்னங்கரேலு'' என்றாள் கில்ஹாட் என்ற இன்னொருத்தி. ''உஷ் அந்த

கருந்தடியன் காதிலெ விழப்போவுது. உம்மாவுக்குத் தெரிஞ்சா வெளுத்துடுவா. ஏய், முப்பத்தையாயிரம் பிடுங்கிட்டாடி'' என்றாள் ஹசினா. ''எப்படி அது'' என்று கேட்டாள் தில்ஹாத். ''உஷ் உம்மா வருவா. அத்தாவுக்கு இதெல்லாம் தெரியாதா?'' என்றபோது உள்ளே திரும்பி வந்து கொண்டிருந்தாள் ஜைத்தூன். வெளியே மழை சாரல் அடிக்க ஆரம்பித்தது. மழையில் நனைந்தபடி கருந்தடியர்கள் உள்ளே வந்து பளபளக்கும் தாமிர அடுக்குகளைச் சுமந்து கொண்டு வெளியே சென்றனர். பளபளத்த அவர்கள் உடல்களைப் பெண்கள் ஆர்வத்தோடு பார்த்தார்கள். அடுப்பிலிருந்த புஸ்கா நெல்சோறும் கோழிக்கறியும் குருமாவும் வாசனை பிடித்த அந்த இளைஞர்களுக்கு இன்னும் சற்று நேரத்தில் அதே காடிகானாவில் சாப்பிடக் கிடைத்தது. முப்பத்தைந்தாயிரம் செய்கிற வேலைதானே. இதெல்லாம் சரியாக நடந்தது.

பெண்களின் கேலிச் சிரிப்பொலியும் எக்களிப்பும் நாற்புறமும் எதிரொலிக்க மாயநாடார் திருப்திகரமாக வெளியேறினார். ஷம்ஷாத்து உள்ளே போனவள் வெளியே வரவே இல்லை. இன்னும் எதை பிடுங்கி விற்கலாம் என்பது அவள் யோசனையாய் இருந்தது. அந்த வீடே ஒரு பெரிய பணப்பெட்டி என்றுதான் சொல்ல வேண்டும். உத்திரங்களை இறக்கி விற்கலாம். எல்லாம் பர்மாத் தேக்கு. காசீம் ராவுத்தரின் முன்னோர்கள் ரங்கூனில் இருந்து கொண்டு வந்து சேர்த்த மரங்கள். அவை காசின் மதிப்பு தெரியாத காலத்தில் தந்தங்களை வாங்கிச் செதுக்கி கருங்காலியில் பதித்து சித்ர வேலை செய்த பிரம்மாண்டமான தூண்கள் தேக்கு மரத் தூண்களில் அடுக்கடுக்காக கருங்காலியும் சில்வர் மட்டும் கலந்து இலை, பூ, காயும் பழமுமாய் சிற்ப வேலை செய்த அபூர்வமான தூண்கள். என்றைக்கு விற்றாலும் ஈனக்கிரயத்தில் கொடுத்தாலும் ஒரு தூண் ஒன்றுக்கு இருபதாயிரம் கிடைக்காது. உடனே விற்க முடியாது. காத்திருக்க வேண்டும். தொங்கிப்போன கிழவனின் நெஞ்சு பூராவும் பணம் ஜைத்தூனுக்குச் சாமர்த்தியம் போறாது. கிழவனைத் தலைக்குமேல் தூக்கியே எல்லாவற்றையும் உறிஞ்சிடணும் என்று சொல்லிக் கொண்டாள். உள்ளே இதெல்லாம் நடப்பது ஒன்றும் தெரியாது ஜைத்தூனைப் பற்றிய கனவுகளோடு வாசல் குறட்டுத் திண்ணையில் இந்த உலகம் எதுவும் தெரியாத காசீம் மொகைதீன் ராவுத்தர் தனது இளமைக்கனவுகளில் குளிர் காய்ந்து கொண்டிருந்தார். வெளி உலகில் ஜைத்தூனைத் தவிர வேறு எதுவுமே தெரியாது பொறா ஷோக்கு ஒன்றைத் தவிர.

**ஆலங்கட்டி மழை**

மழை பெய்து கொண்டிருந்தது. சாரல் மழை. சக்தி இல்லாதது போல் புடைத்துக் கொட்டும் ஆலங்கட்டி மழை. கந்தக மணம் வீசும் இதுபோன்ற மழை பனிக்கட்டிகள் மணல்போல் இறையும் ஆலங்கட்டி மழை இப்போதெல்லாம் பெய்வதே இல்லை. தஞ்சாவூர் கீழ வாசல் கோட்டை வாசல்

இடிந்து விழுந்த மழை ஒன்றும் சேர்ந்தது. இப்போதெல்லாம் தஞ்சாவூர் கோட்டை என்றாலே யாருக்கும் நினைவில்லையே. அவசியம்தான் இல்லையே. கீழ வாசல் கோட்டை வாசல் எவ்வளவு பெரிது தெரியுமா? சாதாரண ஆலங்கட்டி மழைக்கு அது விழுந்து விடுமென்று யார் எண்ணினார்கள்? மழை நிதானமாகவும் அழுத்தமாகவும் பெய்து கொண்டே இருக்கிறது. சவங்கலான காலம் போல ஆலங்கட்டி மழையின் கற்சிதறல் போன்ற பனியின் கட்டி மழை வலுவில் இடிந்து கிடந்த கீழவாசல் கோட்டை வாசல் கதவுகள் அருகே ஒரு பேய் போல மாறு பார்வையுடன் நிற்பது யார்? காசீம் முகைத்தீன் ராவுத்தர்.

அவரை மழையில் இருந்து ஒதுக்கிக் காப்பாற்றி மடியில் போட்டு குழந்தையாக்க இப்போது ஜைத்தூன் பிபியும் இல்லை. அவரைப் பகடைக்காயாக உருட்டி விளையாடி வாழ்க்கையை உடைத்து கபரஸ்தானுக்கு அனுப்பிய ஷம்ஷாத் பேகமும் இப்போ இல்லை. ஆம். காலத்தின் கோலம் இருபது இருபத்தைந்து வருடங்களில் ஷம்ஷாத் பேகம் என்ற அற்புதமான ஸ்திரீ புரிந்த சாகசம்தான் அவள் பத்து குமருகளும் கடந்து போய் பல்கிப் பெருகி விளைந்து போனார்கள்.

ஆம். அந்தப் பழைய வீடு ஒரு ஐஸ்வர்ய குகை என்று யாரும் அறியும் முன்னதாக துனியாவில் அந்தப் பழைய வீட்டை இடித்து உதிர்த்தே புதிய வாழ்வை ஜெயித்துக் கட்டினாள் ஷம்ஷாத்பேகம்.

அடுப்படி மறைந்தது. நெய்யும் அப்பமும் இடியப்பக் குழல்கள் ஓயாமல் சுரந்து ஆவி பரந்தது. அற்புதமான பிரியாணி. அபூர்வமான நளபாகம். யுனானி சமையல். உடலை வளர்க்கும் அற்புதம் ஷம்ஷாத் பேகத்துக்குத் தெரிந்திருந்தது.

காசீம்பாய் கிழவர் என்று எண்ணாமல் அந்த வீட்டைப் பர்தாவில் மூடி அணைத்து அவரது ஆண்மையை எழுபது வயதுக்கு மேலும் விசிறி வளர்த்து அக்னி குண்டமாக்க தேவதைபோல் மலக்காக் ஜைத்தூன்பியை லகான் போட்டு அடக்கி காசீம்ராவுத்தருக்குப் படிய வைத்த சாதுர்யம் யாருக்கு எட்டும்? பசியும் பட்டினியும் விபசாரமும் அழுக்கும் அபத்தமும் நிறைந்த துனியாவில் வாழ விதித்தபோது இந்த வழியை யார் அவளுக்குச் சொல்லிக் கொடுக்க முடியும்? எது அது?

இதே துனியாதான். பத்து வயதிலேயே குமரானவள் ஷம்ஷாத். அவள் அம்மா நம்பவே இல்லை. பத்து வயதில் பெரிசானது பயமாய் இருந்தது. மூலைக்கடை பக்கரியிடம் நாடா போட்டு குர்ரான் ஓதி ஆருடம் பார்த்தாள். பக்கிரி சொன்னது, ''யாருக்காவது சீக்கிரம் நிக்கா பண்ணீடனும், இல்லேன்னா ஆபத்துதான்'' என்றார்.

ஷம்ஷாத்தின் அந்தக் குடும்பத்துக்கே பாதகமாய் வந்தது. ஷம்ஷாத்தை பதினோரு வயதில் அரண்மனையில் கோடா்வாயாவாய் இருந்த முரட்டுக் குதிரைக்காரன் ரப்பேலுக்குக் கொடுத்து கன்னி கழித்தாள் அவள் உம்மா. அது அந்தக் காலம். அப்போதும் ஏழ்மை தன் கொடுமை கரத்தை விரித்து

ஷம்ஷாத்தை உறிஞ்சியது. பசியின் காலம். ஷம்ஷாத்தை பத்து மாத பத்து மாத இடைவெளியில் ஓயாமல் பிரசவிக்க வைத்து பிழிந்தெடுத்தான் ரப்பேல். பெரும்பாலும் பட்டினியும் பசியும் புளியங் கொம்பிலிருந்து கொழுந்து பறித்துத் தின்பதும் புளியங் கொட்டையை அறைத்து இடித்து கஞ்சி வைப்பதுமான கொடூரமான காலம். நினைக்கவே பலம் தந்த உறவு ரப்பேலுடையது. ஊக்கமான ஆள். அவனுக்கு அரண்மனையில் சாப்பாடு கிடைத்து விடும். அதோடு உலுப்பை தலைக்கு எண்ணெயும் தருவார்கள். மருந்து மாயமும் அங்கு உண்டு. ஷம்ஷாத்தின் பர்தாவை உருவி எறிந்து விட்டு இரவு முழுவதும் ஹீனமான குரல் அனுங்க அனுங்க ஷம்ஷாத்தை வெறியின் வடிவமாக்கும் ரப்பேலிடம் ஒரே நல்ல குணம் விடாமல் அவளை உயிருடன் வைத்திருந்ததுதான். காசு தரமாட்டான், முடியாது என்று ஒதுங்கினாலும் சிதைத்து எடுத்து ஒரு மூலையில் அவளை வியர்வைக் கடலில் பிழிந்து போட்டுவிட்டு எழுந்திருக்கும் ரப்பேலைக் கட்டித் தழுவ விடாமல் பரிதாபமாக கவ்விக் கொண்டு தன் ஆசைகளை அவன் மார்பில் கொட்டி அழும்போது மீண்டும் ஒருமுறை அவளை முறுக்கிப் பிழிந்துவிட்டு அதையே மீண்டும் தந்துவிட்டு சில்லறை காசுகளை எறிந்து விட்டுப் போவான் ரப்பேல். அதுக்கப்புறம் ஆப்பக்கடை ஆரம்பம். குடும்பம் முழுசும் ஆப்பக் கடையில்தான். வெல்ல ஆப்பம் தேங்காய்ப்பால் ஆப்பம் வெள்ளை முறுக்கு விற்பாள் ஷம்ஷாத் பேகம். அதே கீழவாசல் கோட்டை வாசல் வெளியேதான் ஆப்பத் தகரத்தை வைத்து காற்று வீச்சு பாதிக்காமல் இன்னொரு சதுரத்தை அடுப்புக் கற்களைச் சுற்றிலுமாய் மறைத்து ஆப்பம் சுடுவாள். அபாரமான சுவை. அந்தக் காலம் அப்படி. கீழ வாசலில் அவள் ஆப்பம் பிரசித்தம். பெரிய வீட்டு ஹாஜியார் பொண்டாட்டி கூட வாங்கிச் சாப்பிடுகிற அபூர்வமான ஆப்பம். திடீரென்று ரப்பேல் வருவான். ஒரு அடுக்கு வெல்ல ஆப்பத்தை இபிலீஸ் மாதிரி சுருட்டிச்சுருட்டி வாயில் திணித்து கபளீகரம் செய்து அன்றைய வியாபாரத்தை ஸ்தம்பிக்க வைத்து விட்டு அதைக் கேட்டதும் ஷம்ஷாத்தை இழுத்துப்போட்டு அவளை அதே இடத்தில் சாத்து சாத்து என்று சாத்தி தெருவையே ஸ்தம்பிக்க வைத்துவிட்டு ரௌடிப் பெண்கள் தடுக்க வரும்போது பிடித்து இழுத்துப் போட்டு அறைந்து விட்டுப் போவான்.

ஏராளமான ஜனங்கள் தெக்குச் சீமையிலிருந்தும் வடக்குச் சீமையிலிருந்தும் தஞ்சாவூருக்குப் பஞ்சம் பிழைக்க வந்து கொண்டிருந்த தாது வருஷ பஞ்சம் அது. இராமநாதபுரம் பக்கம் இருந்து வந்த தேவமார்கள், தேவாங்குச் செட்டிகள், தெலுங்கு பேசும் நாயக்கர்கள், பிராமணத்தெலுங்கு ராவ்கள் ஆந்திரப்பிரதேச வடுக தேசத்திலிருந்து வடக்கிருந்து வந்தார்கள். கொடுமையான பஞ்சம். கோயம்புத்தூர் பக்கமிருந்த வந்து கீதாரிகள் என்று தஞ்சாவூர் கிடுகிடுத்தது. எங்கும் தொழில் இல்லை. சோற்றுக்கு விதைக்க நெல்லும் இல்லை. விதை நெல்லை வேக வைத்து சாப்பிட்ட காலம். சிங்கம்புணரி பாலயம்பட்டியிலிருந்து வந்த பஞ்சத்துக்குப் பயந்தோடி வந்த நாடார்கள் தஞ்சாவூர் கோட்டைக்கு வெளியே கூலிக்கு வயலில் புரியாமல் வேலை செய்தார்கள். அரண்மனையில் மராட்டியர்களின் மாற்றம் - தெலுங்கு

பேசியவர்கள் மராட்டி பேசினார்கள். காலம் பட்டினி வியாதி, கொள்ளை நோயால் தப்பித்து வந்தவர்களைக் காவிரி சேர்த்துக் கொண்ட விபரீதம். வடக்கே இருந்த வந்த ராஜு ஜாதியினர் கோட்டைக்குள் புகுந்தனர். மழை பெய்தது. ஆலங்கட்டி மழை! தண்ணீரே இல்லாத பனிப்பாறை மழை! வெளியே வர ஜனங்கள் பயந்து பட்டினியாய் வீட்டுக்குள் காலங்கழித்த சுகமான நேரம். காலம் நிலைத்தது. பல இனம் பல மக்கள் பல பட்டினிப்பட்டாளங்கள் தஞ்சாவூரில் அபயம் அடைக்கலம் ஆயின!

வித விதமான பெண்கள், கறுப்புகோபி இட்ட நெற்றியுடன் கன்னட ராயர்கள் நான்கு வீதிகளிலும் வளைய வந்தார்கள். விபரீதமான முகச் சாயல் கவர்ச்சிகள். ஒரு புறம் ஒதுங்கிய இடப்புற வலப்புறசீலை கொசுவத்தோடு கும்டா அணிந்த மராட்டியப் பெண்களின் ரகங்கள். எல்லோருக்கும் வேலை இல்லை. ஆனால் பசித்தது. உழைக்கத் தயார்தான். கூலியில்லை. வேலை தர ஆள் இல்லை. தஞ்சாவூர் கனத்து போயிற்று. வழிப்பறி கொள்ளைகள்- திருட்டு, பிடித்துப் பறித்துப் போகும் கள்ளர் பெருமை- மறுபடியும் காவல் என்ற பெயரில் கவர்தல்- ஊர் ரெண்டு பட்ட நேரம் பெண்களால் மட்டுமே சுலபமாக வேனும் ஜெயிக்க முடிந்தது.

இந்த வேளைகளிலும் காசீம் முகைத்தீன் ராவுத்தருக்கு வேலை இருந்தது. தஞ்சாவூரைச் சுற்றிலும் அறுபது புறா வீடுகள் இருந்தன. அவருக்கு எட்டு வயதில் பழகிய வேலை அது. பொறா ஷோக்கு கொடிகட்டி பறந்த காலம். ஷம்ஷாத் குழந்தையாய் இருந்த போதே காசீம் முகைத்தீன் ராவுத்தரைத் தெரியுமே. பெரிய வீட்டுக் குடும்பம். வானளாவிய வீடு அது. துலுக்கத் தெரு முகப்பில் பள்ளிவாசல். அதன் பின்னால் பளிங்குக் கற்களால் ஆன மாளிகை. காதர் மியான் கைக்காலில் உள்ள நிலம் பெரும் பகுதியும் காதர் முகைதீன் ராவுத்தரின் வாப்பா ரங்கூனில் இருந்து வட்டித்துக் கொண்டு வந்த செல்வம். ஏராளமான சொத்து. நெய் மணம், கொழுப்பு உருகும் கறிவாடையும் குஞ்சாவி நெடியும் கவுச்சியும் இல்லாமல் அந்த வீடு இல்லை. பத்து மகள்களும் பத்து திசையில் சம்பாதிக்கப் போனார்கள். யார் யார் சிங்கப்பூரில் இருக்கிறார்கள் யார் ரங்கூனில் அரித்து கொண்டு வந்தார்கள், என்ற கணக்கு இல்லை. காலம் காசீம் முகைத்தீன் ராவுத்தரைப் பெற்று தந்த போது அவர் வாப்பா மய்யத்தாகிப் போனதும்தான் எல்லாம் புரிந்தது உலகுக்கு.

வந்த பணம் நிலைத்துவிட்டது. யாரையும் காணோம். அவர்கள் இந்தோனோஷியாவிலும் ரங்கூனிலும் தங்கி விட அவர்களை நிக்காவ் செய்த ஒரே காரணத்தால் வெந்து வெந்துகொண்டே அந்த வீட்டின் உள்ளே திரைச் சீலைகளுக்குள் இருண்டு போனார்கள். ஏராளமான பெண்கள் போனவர்களும் வந்தவர்களும் அந்நியர்களாகிப் போன விபரீதம். செய்தி ஏதும் இல்லை. பெரிய ஹாஜி மய்யத்தான பிறகு குடும்பம் ஏன் குப்புற விழுந்தது. யாராலும் சொல்ல முடியவில்லை.

அரண்மனைகளில் குமஸ்தாவாக வேலை செய்த இந்த காசீம் அரண்மனையிலேயே மாரடைத்து செத்ததும் அவர் மனைவி ரசியா கதறிக் கொண்டு ஓடியவள் திரும்பி வரவில்லை. ஏன் என்றும் தெரியவில்லை.

ஆலங்கட்டி மழை. அன்றும் கூட வெளியே வர பயந்த போது பர்தாவை உருவி எறிந்து விட்டு அத்தா போயிட்டீங்களா என்று கதறியபடி ரசியா எங்கே போனாள். ரசியாவைத் தேடிப் போன லாலுவும் சாஹியும் மீண்டும் காணோம். என்ன ஆச்சு? ஆலங்கட்டி மழையில் யார் வெளியே போவது? தலை மண்டை உடைந்து விடும். கோரமான பனிக்கட்டி மழை.

அந்த வீட்டு நிர்வாகம் அவன்மீது இருந்தது. சின்னக் காசீம் பயந்தான். இருந்த மூன்று ஆண்களில் காசீம் சின்னவர். அந்த வீட்டை மீதம் பிடித்து காத்திருந்தவர். தஞ்சாவூர் அரண்மனையில் ஏதேதோ நிகழ்ந்து கொண்டு மராட்டிய அரசர்கள் தலை தூக்கி ஆடினர். ஏராளமான முஸ்லீம் சிப்பாய்கள் புதுப்புது உடைகளில். தஞ்சாவூர் சுற்றிலும் மாடுகள் காணாமல் போயின. யாரிடமும் சொல்ல முடியவில்லை. தினமும் கவாத்தும் உடம்பு பயிற்சியும் செய்யும் சேனை வீரர்கள் கோட்டைக்கு மேலும் வெளியேயும் ஆலங்கட்டி மழை சாரலிலும் பயிற்சி செய்தார்கள். காசீம் முகைத்தீன் ராவுத்தர் அப்போதும் எங்கோ போவார் எங்கோ வருவார். வீடு பற்றியும் யார் பற்றியும் அவருக்கு நினைவு இராது.

எப்போதாவது அந்த வீட்டு மாடிக்குப் போய் வானத்தில் இருந்து புறாக்களுடன் சமிக்ஞை பழக மேலே போகும் போதுதான் அந்த வீட்டுப் பெண் மக்கள் அவரை கண்டதும் பர்தாவை இழுத்து வீட்டுக்குள் ஒதுங்கும் போது தெரியும் முக்கோண முகங்களைக் கொண்டுதான் இவள் இன்னாள் என்று தெரியும். அடேயப்பா எத்தனை பெண்கள் எத்தனை பெரு மூச்சுகள். ஒன்றும் முடியாமல் அவரைத் தேடி வரும் பெண்களை எத்தனை முறை ஒதுக்கி புத்தி சொல்லி அனுப்பியிருக்கிறார். அந்த வீட்டில் இருள் இப்போதும் நிரந்தரம் ஆயிற்று. ஆலங்கட்டி மழையில் அந்த வீட்டு சிறுவர்களும் சிறுமிகளும் பனிக்கட்டி பொறுக்கும் வேளைகளிலும் கூட மனைவிகளின் தாபத்தைத் தணிக்கக் கூட வீடு தங்க மாட்டார் காசீம் முகைத்தீன் ராவுத்தர்.

சாப்பிடும் காலத்தில் உட்கார்ந்து உண்ணும் போது ஒரே நேரத்தில் இரண்டு மனைவிகளின் தழுவல் நேரும். காசீம் மெத்தைப் புறத்தே ஏறக்கூட இடம் தரமாட்டாள் ஜன்னத். காசீம் முகைத்தீன் ராவுத்தரின் ஐந்து பீவிகள். ஐந்து பேரும் தெற்கே கீழக்கரை பட்டணம் சார்ந்த பெரிய வியாபாரியின் நைஜாமின் பெண்கள். வீட்டுக்குள் வரும் போதெல்லாம் பீவிகளின் வியர்வை ஊறலில்தான் விழிப்பார் காசீம். ஜன்னத் அவரை விட்டு எழும்பவே மாட்டாள். காசீம் பாய் வந்ததும் மடக்கி அவர் கரங்களை வளைத்து கால்களுடன் பின்னிப் பின்னி கிறங்க அடிப்பாள். ஐந்து பேரிடமும் மாறி மாறி மிகக் கிரமமாக காதலைக் கொடுக்கும் அமைதி அவரிடம் இல்லாவிட்டாலும் எப்போதும் அவரைத் தழுவித் தழுவி நேரத்தை வீணாக்காமல் ஐந்து பீவிகளும் கிரமமாக - வாரி வாரி அவருக்கு-அவருக்கு மட்டும் வாரி வழங்கி ஒவ்வொருவரும் கொடுமையான வேகத்துடன் காதலித்தார்கள். தெய்வம் போன்ற பெண்கள் - சமைப்பதும் ஊட்டுவதும் காப்பதும் ஆன அபூர்வமான மூடுபடம் இட்ட பாயும் குதிரைகள் அவர்கள். காசிம் பாயை ஊட்டி ஊட்டி அவரது உயிரை

வளர்த்தது ஆச்சர்யம். வெளி ஆண்கள் யாரையும் தெரியாது. அந்த வீட்டைவிட்டு இருண்ட மூலைகளும் அரவை எந்திரமும் உரலும் குந்தாணியும் திருவையும்தான் தெரியும். உள் வீட்டுக்குள் அங்கணத்தில் யாரும் வர முடியாத கோட்டை போன்ற வீடு. வீட்டு ஆண்களுடன் கூட அதிகம் பேச யாரும் இருப்பதில்லை. ஆலங்கட்டி மழை பொழியும் போது மட்டும் எல்லாம் பெண்களும் வேடிக்கை பார்க்க வாசல் குறட்டில் வந்து நிற்கும்போதும் யாரும் அவர்களைப் பார்க்க முடிவதில்லை. மூடி மூடியே ஒரு அற்புத வாழ்க்கை. ஜன்னத் வந்து சொன்னாள். ''ஹோவன்ரா புள்ளையாண்டிருக்கிறா. மூணுமாசம் பாருங்க அத்தா! அவ கூட புள்ளைப் பெறப் போறா'' என்றாள் வெட்கப் புன்னகையுடன் அவர் மார்பில் அவளது கனிகள் கசங்க இறுக அணைத்தபடி. ''எனக்குத் தெரியாம எப்படி நடந்தது?'' என்று முட்டி முட்டி அவரைத் திகைக்க அடித்தாள் ஜன்னத். ஆலங்கட்டி மழையின் இரைச்சலில் ஜன்னத்தின் ஆபாசமான திட்டுதல் புரியவில்லை. அவர் மேல் ஏறி இறுக்கியபடி ''ஜொஹரா கிட்ட எப்ப போனியா? எப்ப எப்ப?'' என்று கசக்கி வசக்கினாள் ஜன்னத்.

ஜன்னத் ராணி இளையராணி. அவளைவிட மிகச் சின்ன பெண் ஜொஹரா அவளைச் சரியாகக் கூடப் பார்த்ததில்லை. காசீம்பாய் நிக்கா செய்து கொண்டு வந்ததிலிருந்து அவளெ ஜன்னத் போட்டு வைத்ததும் நல்ல பிள்ளையாகத்தான் இருந்தார் காசீம்.

மற்ற பீவிகளுக்குத் தடை சொல்ல ஜன்னத்தால் முடியாது. ஹாஸீனாவும் ஜன்னத்தும் நூரியும் அயர மாட்டார்கள். அது ஒரு பந்தயம். யார் ஜெயிப்பது? ஜெயித்தப் பெண்ணுக்குக் காசீம்பாய் தங்கம் வெட்டிக் கொடுத்தாக வேண்டும். அத்தனை சுகம் அது. கேட்பவர்களுக்கு உடம்பும் முலையும் யோனியும் ஆன காமம் மாதிரி இருக்கும். புரியாத பந்தயம். ஐந்து பீவிகளும் முட்டாக்குக்குள் மூடி மூடியே பத்து பெண்களையும் மூன்று ஆண்களையும் பெற்று எடுத்தனர். காசீம்பாய் பெரிய குடும்பி.

இப்போதெல்லாம் ஆலங்கட்டி மழை பெய்வதில்லை. தாது வருடப் பஞ்சம் கொடூரம் ஆயிற்று. பெரிய வீட்டிலும் அது உச்சமாய் எட்டியது. வீடு பற்றிய நினைவே இராது. காசீம் முகைத்தீன் ராவுத்தருக்கு ஜொஹ்ரா என்ற பெண்ணை நிக்கா செய்த அன்று பார்த்தது. எப்படி பண்ணினீங்க என்று சவுக்கை எடுத்துக் கொண்டு சொடுக்கினாள் ஜன்னத். ஜொஹ்ராவைக் கூப்பிட்டு வெள்ளிக் கம்பியால் பழுக்க வைத்து இழுத்தாள். எனக்குத் தெரியாம எப்படி அவுசாரி போனே என்று அடித்து துவைத்தாள்.

இரவு பத்து மணிக்கு மேல் ராவுத்தர் வீட்டுக்கு வந்தபோது மன்ஸில் இருண்டு கிடந்தது. நீண்ட அழுகுரல் ஜொஹ்ராவின் ஒற்றைக் கோட்டு அழுகுரல் அது. ஜொஹ்ராதான் என்று இனம் காட்டும் தனி விக்கல் கதறலாய் எழுந்தபோதுதான் - காசீம் முகைத்தீன் ராவுத்தருக்கு நினைவு வந்தது. ஆமாம். அன்றும் ஆலங்கட்டி மழையின் இரவுதான். காடிகானாவில் உழைத்தும் அத்தர் மணம் தனி ஒரு விக்கல் கேட்டதும் ''யாரு?'' என்றார் காசீம்பாய். ''உள்ற

போகாதிய'' என்ற முனகலுடன் உடைந்து கிடந்த காடி கோச் படிக்கட்டிலிருந்து ''உள்ற ஜன்னத் நாரி'' என்று குசுகுசுத்ததுடன் இரண்டு அனல் பறக்கும் பிறைமுகம் அக்னி உதடுகளுடன் ''அத்தா என்னெ உட்றாதிய உட்றாதிய'' என்றபடி அவரை புனுகு ஜவ்வாது மணத்துடன் காரை வளையல்களும் தங்க வளையல்களும் நெருங்க, இரண்டு கரங்கள் சின்ன அழுகுரல் சிணுங்கலுடன் தழுவிக் கொண்டன. காசீம்பாய் இயக்கினார். ஆவேசம் பயம் மூச்சு முட்டும் ஆசை. ஜொஹ்ராவுக்கு ஆணின் முதல் ஸ்பரிசம் உள்ளிறங்கி கொடி வீசி மின்னலுடன் ஆலங்கட்டி மழை வேறு பனியுடன் கனத்த குளிர் நெருக்கியடிக்க, ஜோஹ்ரா என்று காதலுடன் பலியிடட்டாள். ஜன்னத் நாரி வர்றதுக்குள்ளே வர்றதுக்குள்ள என்று புலம்பிப் புலம்பி நடுங்கியபடி சூழ்ந்து பொங்கிய ஜொஹ்ராவின் வடிவ அழகை மெல்ல மெல்ல பீடிக் கங்கின் வெளிச்சத்தில் பார்த்து அசந்து போனார் காசீம். அல்லா. படச்சவனே. என்ற ஆனந்தம் இது. இது அசிங்கம்ங்கறாளே ஜன்னத்? இது கேவலம் பெண்ணாசை துனியாவுல தப்புன்னு அல்லா சொல்லவே இல்லெ. அப்பா இத்தினி நாளு ஜொஹ்ராவுக்குத் தர வேண்டிய சொகத்தைத் தராதது எத்தனை பெரிய தப்பு! எல்லாருக்கும் எத்தனை பணிஞ்சி மாடு மாதிரி இந்த வீட்டுக்கு எத்தனி வருஷமா உழைக்கிற ஜொஹ்ரா இந்த நினைப்பு வந்ததும் தாமரை இதழ்களைக் கடித்துச் சுவைத்து மார்புகளில் குடியேறி இரண்டறப் புகுந்தார் காசிம்பாய். ஜொஹ்ரா மந்திரம் பூண்டு தங்க முலாம்பூசிய உடம்பை அவருக்குள் நடுங்கியபடி ஜன்னத்தின் பயத்திலும் அவரை வாரித் தழுவி சென்றாள்.

''ஜோஹ்ரா! ஜோஹ்ரா எங்கடீ போனே! அப்ப பிடிச்சு காணுமே'' என்ற கூக்குரல் கேட்டுக் கொண்டே இருக்க அந்தப் பழைய கோடாவண்டியின் இருண்ட பின்மெத்தையில் கோச்சு கதவுகள் இறுக அடைத்துக் கொள்ள ஜொஹ்ராவின் ஆழமான குகையுள் கனலுடன் காசீம்பாய் புது மனுஷனாய் ஆதம் நபியும் ஹவ்வாவும் ஆகிப் போனார்கள். முழு நிர்வாணம்.

ஆலங்கட்டி மழை ஜோவென இரைந்து பெய்யலில் அதற்குப் பின் மழையற்றுப் போனது. மழை போலவே ஜொஹ்ராவையும் காண முடிவதேயில்லை. இதெல்லாம் காசீம்பாய்க்கு மறந்தாபோகும். ஒளித்துக் கொண்டார். ஜன்னத்துக்குச் சந்தேகம் வந்தால் போச்சு எப்ப நடந்ததுடி எனக்குத் தெரியாமை, எவங்கூட படுத்தே என்று ஆபாசமாய் திட்டி சூடு வைத்தாள் ஜன்னத். அவளைப் பொறுத்தவரை ஜொஹ்ரா ஒரு அடிமை. வேலைக்கு நிற்கிற கூலி. ஜன்னத் போலவே அந்த வீட்டில் ஆண் வாசனைக்குக் காத்திருக்கும் அற்புதமான கற்புக்கரசிகளான பன்னிரெண்டு பெண்கள் அந்த வீட்டில் புழுங்கிக் கிடந்தது யாருக்குத் தெரியும். கரணம் தப்பினால் மரணம் நேரும். எல்லா ஆம்பிளைகளும் சபரி போயிருந்ததால் சாப்பிடாமல் தூங்காமல் ஓதாமல் தூங்காமல் கன்னிகாக்கும் அந்த மகா உத்தமமான பெண்கள் தெய்வமல்லாமல் வேறு யாராய் விளங்க முடியும், ஆனால் இப்போதெல்லாம் ஆலங்கட்டி மழை பெய்வதில்லை. ஏனோ மழையும் அற்றுப் போய் பஞ்சமும் வந்தது. வீடும் இருண்டது. கொள்ளை நோய்

வந்தபோது அந்த வீட்டு பெண்கள் நாலுபேர் பலியானார்கள். பஞ்சத்தோடு கொள்ளை நோய் வந்தபோது - பிணங்கள் சாதாரணங்கள் ஆயின.

இன்னும் ஒரு தடவை ஜோஹ்ராவைப் பார்க்க ஆசைதான். அதற்கு முன்னதாகவே அவள் கர்ப்பம் ஆகிவிட்டாள். எப்படி என்று தெரியவில்லையாமே. வெள்ளிக்கம்பியைப் பழுக்க வைத்து இழுத்தும் யார் என்று சொல்ல மறுத்தாள் ஜொஹ்ரா. கதறக் கதற அவளை அடித்து நொறுக்கி அள்ளினாள் ஜன்னத். "யாருடி பண்ணா? யாரு செஞ்சா? யாருகிட்ட படுத்தே?" ஜன்னத் மிருகம் குதறியது. திடீரென்று உள்ளே வந்தார் காசீம். வாழ்க்கையிலேயே முதன் முறையாக ஜன்னத்தைத் தன் நீண்ட கரங்களில் இழுத்து தடுத்துப் பிடித்து நாலு பீவிகளும் கதற தூக்கிப் போட்டு மிதித்தபடியே "நாந்தாண்டி காரணம். நாந்தான் செஞ்சேன். ஏ பெண்டாட்டிதான? எம் பீவிதானே அவளும். அவ வயித்துப் புள்ள என்னுது. பேசாதடி. மூச்சு உடாதெ" என்று அறைந்தார் காசீம்.

எல்லாரும் நிலை குத்தி நின்று போனார்கள்.

தனி விக்கல் ஒன்று ஜொஹ்ராவிடம் உடன் கிளம்பியபோது அங்கே அவளை அள்ளி எடுத்துக் கொண்டு தன்னறைக்குள் கொண்டு போய் மறைந்து கொண்டார். அவள் மார்புச் சேலையில் புதைந்து போனார். விக்கல் தனியாக வீச அவருடன் கலந்து போனாள் ஜொஹ்ரா. ஆலங்கட்டி மழை நின்றது போலவே அவரது ஆசையும் பாசமும் நிலைத்து நின்றது. அப்புறம் ஜொஹ்ராதான் ராணி.

ஜன்னத் அத்துடன் படுத்த படுக்கை ஆகிப் போனாள். அவளால் இதனை சகிக்க முடியவில்லை. நூரியிடம் இருந்த நிர்வாகத்தையும் பயந்து போய் அவர்களாகவே ஜொஹ்ராவிடம் கொடுத்துவிட்டதும் ஜன்னத்துக்கு எல்லாம் மாறியது போலாயிற்று. கொடூரமான வைசூரி வந்து ஊரே கலகலத்து கொட்ட ஆரம்பித்தபோது பத்து சாவு இந்த வீட்டிலும். பெரிய தனக்காரர் வீடுகளில் கூட பயங்கரமாய் கோட்டை மேடு முழுவதும் வைசூரி சாவு நேர்ந்தது. அப்போதுதான் பெரியவீட்டு சின்னக் காசீம் அரண்மனையில் மாரடைப்பில் பொட்டென்று முடிந்துபோனார். அந்த வீட்டுப் படி இறங்கி அறியாத இரண்டு பெண்கள். அவரது பீபிகள் ரசியா, மணி ரெண்டு பேரும் முதல் முறையாக வீட்டுப் படி தாண்டி கதறியபடியே ஓடினார்கள். திரும்ப வரவில்லை. யார் போய் தேடுவது? வீட்டில் ஆம்பளை என்று இருந்தவர்கள் மூவர் - மற்ற பதினைந்து பேரில் சபர் போனவர்கள் இரங்கூனுக்கும் சிங்கப்பூருக்கும் போனவர்கள் திரும்பக் காணோம். அபரிதமான சம்பாத்தியம். வீட்டு ஆம்புளைகளில் காசீம்பாய் தவிர சின்னக் காசீம் அரண்மனை உத்யோகம். மாரிலே அத்தர் கழுத்திலே சந்தனம் என்று இருந்தவர். அடுத்தது ரசூல்பாய் ஒருவர். மூன்று பேருமே வீட்டை விட்டு வெளியேறினால் ராவுக்குப் பத்து மணிக்கு மேல்தான் எட்டிப் பார்ப்பார்கள். ஆண்மக்கள் இல்லாத குறைந்து தேய்ந்த வீடாச்சு. பெண்களைக் காணும். வீட்டுக் குமர்கள் புலம்பினர். வயதான கிழவிகள் வெளியே வர அஞ்சினர். ஊர் பஞ்சத்திலும் பசியிலும் ரெண்டு பட்டுக் கிடந்தது. பயம் எல்லோருக்கும். சரபோஜி மகாராசா காலத்தில் தழைச்ச

குடும்பம் இப்ப இருண்டு கிடக்கு. கோட்டைக்கு வெளியே நாடார்கள் மண்டி கடை திறந்து கீழ வாசல் கடை தெருவே பெரிதாயிற்று. கரத்தட்டாங்குடி மண்டித் தெருவும் எண்ணெ வியாபாரமும் கீழ வாசலிலும் ஆரம்பித்தது ஆச்சர்யம்.

எங்கு பார்த்தாலும் மனிதர்கள். இவ்வளவு பேர் தஞ்சாவூரில் ஏது? எப்படி வந்தார்கள்? மராட்டியர்களோடு மராட்டியராவகளும் மல்லுகச் செட்டிகளும் அரண்மனையில் வந்து பல்கி விட்டார்கள். கவாத்து செய்யும் சிப்பாய்களிடையே மல்யுத்தப் புரட்டல்களும் மல்கம்பம் ஏறுதலும் பாய்தலும் தஞ்சாவூரை வியப்பில் ஆழ்த்திய போது எதிலும் எந்த வியப்பும் ஏறாத ஆத்மா ஒன்று உண்டென்றால் அது காசீம் முகைத்தீன் ராவுத்தர்தான். வீட்டில் ஏக களேபரமாய் இருந்தது. ரசியாவைக் காணும். போனவன் வர்லெ. கூடவே போன மஹிம்மும் திரும்பி வரவே இல்லையாமே ஏன்?

காசீம் பாய் இருளில் வீடு வந்து சேர்ந்த போது பெண்களின் கதறல் பிலாக்கணம் -

"ரசியாவெக் காணும் மஹிம்மும் வர்லெ" அழுகை ஆச்சர்யமான பயம் எல்லாருக்குமே. பெண்கள் வெளிய தெருவில போகக் கூடாதுன்னு தெரியாது என்று கத்தி விட்டு காசீம்பாய் கையில் தீப்பந்தத்துடன் புறப்பட்டார். பத்து முஸ்லீம் இளைஞர்களும் கூடப் புறப்பட்டார்கள் துலுக்கத் தெருவிலிருந்து. அதே நேரத்தில் பெரிய வீட்டு பின் கட்டில் சமையல் அறைக்கு அடுத்த உக்கிராணத்தில் ஜன்னத் பீவி ஒரு பெண் குழந்தையும் ஆண் பிள்ளெயாக ஐந்து நிமிடத்தில் இரண்டாவதுமாக பெற்றெடுத்தாள். இப்போதெல்லாம் ஜன்னத் நடமாட்டம் ஓய்ந்து விட்டது. பொறா ஷோக்குக்கு போனா காசீம்பாய் வர்றதே எப்ப என்று சொல்லவே முடியாது. அடுத்த அதே மணி நேரத்தில் ஜொஹ்ராவும் பிள்ளைகள் இரண்டு போட்டு பந்தயத்தில் ஜெயித்தாள். அவளுக்குள் ரெண்டும் பெண்கள்தான். இரண்டு வெளியே வந்ததும் ஆச்சர்யம். இன்னும் ஒன்று ஆண் - மூன்று பிள்ளைகள் காசீம்பாய் அயர்ந்து போக.

ஜன்னத் உள்ளே அழுது கொண்டே இருந்தாள். பொறுக்க முடியவில்லை. மனமும் இல்லை. இனி என்ன செய்ய?

"ஒரே உந்தலில் மூணு புள்ள பெத்திருக்காளே ராச்சசி. தூய்மையான நஞ்சின் வாடை பிள்ளைக் கவுச்சி. ரசியாவைத் தேடிப் போனவர்கள் பிள்ளை பிறந்த சேதி கேட்டு வந்து வியந்தார்கள். ஜோஹ்ரா ராணியாகத்தான் கிடந்தாள். அதிகாரம் கொடிகட்டியது. ஜன்னத் ஊமையாகக் கிடந்தாள். காசீம் முகைத்தீன் ராவுத்தரை மட்டும் காணோம். ரசியா எங்கே? எல்லாரும் மௌனம் ஆகிப் போனார்கள். பொம்பள வெளியே போனா அவ்வளவுதான் என்று முனகினார்கள். போய வந்த இளைஞர்கள் கொதித்தனர். ரெண்டில் ஒன்று பார்க்க வேண்டும் என்றார்கள். விஷயம் இதுதான். ரசியா, மாஹிம், லாலு மூணு பெண்களையும் கீழராஜா வீதியில் இருந்த மங்கள விலாசம் அரண்மனையில் பிடித்துக் கொண்டு போய் அடைத்து விட்டார்களாம்.

பெண்களைத் திரியவிட மாட்டார்கள். திரிந்தால் யார் பிடித்து எடுக்கிறார்களோ அவர்களுக்கு. அட அல்லா. இது என்ன ஞாயம். ஆனால் யாரும் மூச்சு விடவில்லை. சின்ன காசீம் உடல் மய்யத்துக்குக் கொண்டு போகப் பட்டது. எல்லாரும் சாப்பிட்ட பின்னர் மாடிக்கு ஏறிப் போகும் காசிம் முகைத்தீன் ராவுத்தரை அந்த ஒரே ஆம்பளையைத் தேடிப் புறப்பட்டது ஒரு பெண் உருவம். இரவு வெகு நேரம் ஆகி விட்டிருந்தது. மாடியில் இருந்த பொறாக்கூண்டில் இருந்த புறாக்கள் அவர் சருகல் கேட்டதும் உம் உம் என்று குலவை ஆடின. ஒவ்வொரு புறாக்கூடாக மாடம் மாடமாகப் பிடித்துப் பார்த்து அவைகளுடன் பேசிக்கொண்டிருந்தார் காசீம்பாய்.

விசாலமான மாடி மொட்டை திடல் அந்த இடம்.

அங்கே ஆயிரம் ஆயிரம் புறாக்களுக்குக் குறைவில்லாமல் வளர்த்து வந்தார். அவருக்குப் பிழைப்பே புறாக்கள் உலகம். அவருக்கு ஒரு புறாக்கூண்டு. புறாவின் பாஷை அவருக்குத் தெரியும். எட்டு வயதில் அவரிடம் சையத் பாவா என்ற மக்கீர் இரண்டு புறாக்களைக் கொடுத்து இதை வளர்த்துவா என்றதிலிருந்து புறாக்களின் ஸ்நேகம். புறாக்களின் துனியா அவருக்கு மிகச் சுலபமாக அறிமுகம் ஆனது. புறாக்களில்தான் எத்தனை வகை? நமக்கு எல்லாம் ஒன்றேதான். காசீம்பாய்க்கு அத்தனையும் இனம் பிரிக்க முடியும். தனித்தனியே கூப்பிட முடியும். எந்தப் புறாவையும் ஐந்து நிமிடத்தில் தன் தோளில் உட்கார வைக்க முடியும். உஹிசம் மஹூம் என்று ஒரு விதமாக பாஷையில் அவைகளுடன் பேச ஆரம்பித்தால் மணிக்கணக்காக புறாக்கள் அவரைச் சுற்றிக் கொண்டே இருக்கும். சொன்னபடி கேட்கும். சொன்ன இடத்தில் உட்காரும். அரபி இல்லாத தமிழும் அல்லாத ஏதோ ஒரு விசேச சங்கேதத்தை அவர் புறாக்களிடமிருந்து கற்றிருந்தார். தஞ்சாவூரில் அரண்மனையில் நாயக்க மன்னர்களின் ஆட்சியில் அரண்மனை மேல் மாடியில் பத்தாயிரம் புறாக்களை நிர்வாகம் செய்தார். ரகுநாத நாயக்கனின் பேரன் மன்னாருக்கும் அவர் புறாஷோக்கின் குரு.

இந்த பொறா ஷோக்கு' என்றால் என்ன? பணக்கார விளையாட்டு. கோழிச்சண்டை போல ஆட்டுக்கிடாய் மோதல் போல, மாடுபிடி போல மஞ்சுவிரட்டு மாதிரி. ஆனால் அவற்றெ விட மிக நுண்மையான அபூர்வமான விளையாட்டு. ஆந்திராவிலிருந்து கம்மவாரி நாயக்கர்கள் தஞ்சாவூருக்குக் கொண்டு வந்த பல விருது பெற்ற விளையாட்டுகளுள் இதுவும் ஒன்று. புறா பந்தயம் என்றும் சொல்வது உண்டு. ராஜாவுக்குச் சமதையாக விளையாடுவதற்கு அந்தப் புறாக்களுக்கு மட்டுமல்ல அரசவை பிரதானிகள், ராஜ நிர்வாகிகள், அரசனின் மந்திரிகள் ஆகியோரும் பந்தய புறா வளர்ப்பிலும் அவைகளின் ஷோக்கு கூட்டுவதிலும் ஈடுபடுவார்கள். புறாக்கள் ஒரு அற்புதமான உயிரினம். ஈரறிவு உயிரினமாக பொதுவாக அதைப்பற்றி மனிதன் தவறாக கணக்கிட்டிருக்கிறான். அந்த ஈரறிவிலேயே ஏழாவது அறிவுவரை நீட்டிக் கொள்ளும் ஷுருதா பிறவி புறா. அது காசிமுக்கு அத்துப்படி. இரவுபகலாக புறாக்களுடனேயே அவரது ஜீவனம் கழிந்தது.

சோறு வேண்டாம் தூக்கம் வேண்டாம் மனைவி வேண்டாம் குடும்பம் வேண்டாம். புறாக்கள் போதும் அவருக்கு. அது என்னவோ அவரைக் கண்டதும் புறாக்கள் கும்மளி இட்டுக் கொண்டு அவரைச் சுற்றிச் சுற்றி பறப்பதும் அவரது தோள், தலை, உடல் முழுவதும், புறாக்கள் உட்காரும் ஆச்சரியமான காட்சி எங்கும் கிடைக்காது. வாயில் புகையும் பீடியுடன் ஒவ்வொரு புறாவாகப் பிடித்து தட்டிக் கொடுத்து வாய் நிறைய தானியத்தைத் தன் எச்சிலோடு சேர்த்து ஊட்டும் அவரது வாயும் புறாவின் அலகும் ஒன்றாகி விடும். நீளமாக ஊதி விடும் அந்த உணவு சில நேரம் அவருக்கும் உணவாகி விடும். சுவைத்து சுவைத்து தான் உண்டதை கக்கி கக்கி புறாக்களுக்கு ஊதி விட்டுத் தரும் ஊட்டு முறை அந்தப் புறாக்களுக்கு இனிக்கும் போல. ஒரே நேரத்தில் பறந்து பறந்து அவர் வாயிலிருந்து மென்று நைவான தானிய உணவை அவருக்கு வலிக்காமல் அள்ளி உண்ணுகிற காட்சி பெரிய வீட்டு பெண்களுக்கே ஆச்சரியமாக இருக்கும். எத்தனை முறை பார்த்தாலும் யாருக்கும் சலிக்காது. தேவலோகத்தில் இருந்து வந்த காப்ரியல் மலக்கு மாதிரி அவர் அந்தப் புறாக்களின் நாயகனாக அவற்றுடன் உறவாடி அவருக்கு வேறு நினைவே அற்றுப்போனது. யாருடனும் பேசவே மாட்டார். இரவு பகல் என்று தஞ்சாவூர் அவர் தெருவில் அலைவது எல்லாம் புறாக்களுக்காகத்தான். அரண்மனைக்குள் நாயக்க மன்னர்கள் இவருக்குத் தனி உரிமை கொடுத்திருந்தனர். அரண்மனைக்குள் மட்டும் பத்து புறா வீடுகள் கட்டிக் கொடுத்திருந்தனர். சின்னச் சின்ன மாடங்களுடன், எப்போது வேண்டுமானாலும் புறா வந்து போகக்கூடிய தானாகவே திறந்து மூடிக் கொள்ளக் கூடிய காக்காப் பொன் கதவுகள் சுழலும் அற்புதமான கூடுகள். மனிதனை விட அற்புதமாக வாழும் புறாக்கள். திருவையாற்றின் கரையில் ஆற்றங்கரையிலும் என்றைக்கும் விளங்கும் புறாவீடு உண்டு. குலமங்கலம் போகும் ஆற்றோரப்பாதையில் புறாக்கள் வந்தடையும் தனிக் கூண்டுகளை அரசர்கள் கட்டித் தந்தார்கள். பல தேசங்களில் இருந்து குறிப்பாகப் பாரசீகத்திலிருந்தும் அரேபியாவிலிருந்தும் தருவிக்கப்பட்டன. வந்ததும் அவற்றுடன் பேசிப் பழக்கி அவைகளின் பாஷையையும் தனதாக்கிக் கொள்ளும் ஆச்சரியமான அல்லாவின் மனிதன் காசீம். அந்தப் புறாக்களும் அவரை மீறி எதுவும் செய்ய முடியாத அன்பில் பிணையுண்டு நின்றது. மாரியம்மன் கோவில் அருகே சமுத்திரத்தின் கரையில் நான்கு புறா வீடுகளை சரபோஜி கட்டினார். இப்போது தஞ்சாவூரில் உள்ள நவதர்க்காவிலும் காசீம் கொண்டு வந்து சேர்த்த புறாக்கள் மேய்ந்து அந்தப் பள்ளி வாசல்களைத் தெய்வீகம் ஆக்கி கொண்டிருந்தன. புறாக்கள் இல்லாமல் நபிகள் நாயகரும் இருந்திருக்க மாட்டார் என்று நம்பினார் காசீம். அவர் புறாக்கள் வளர்ப்பதில் மட்டுமல்ல. புறாஷோக்கு என்பது வேறு. அந்தக்காலத்தில் புறாப் பந்தயம் என்பது வேறு. புறாக்களை வளர்த்து செல்வந்தர்கள் ராஜாக்கள் அவற்றை மாடு போன்ற பந்தயத்தில் இறக்கி விளையாடினார்கள். இதில் ஏராளமான பணம் பந்தயமாகக் கட்டப்பட்டது. எந்தப் புறா சொன்ன இடத்தில் சொன்ன விதம் சேர்ந்து உங்களுக்கு ஏற்றபடி குறிப்பிட்ட கால அவகாசத்திற்குள்

தேவைப்பட்ட செய்தியோடு வெற்றிகரமாக முதலில் வருகிறதோ இது ஒரு வகை. இன்னொரு பந்தயம் குரூரமானது. போர் புறாக்கள் இவை. எதிரி புறாக்களை விரட்டிச் சென்று அடித்து வீழ்த்தும் பயங்கரமான நம்ப முடியாததாகும். இவை மாமிசம் உண்ணும் புறாக்கள். இவைகள் மிகக் கடுமையானபயிற்சியும் போர் வில்லங்கமும் வீரியமும் எந்தக் காலத்திலும் காண முடியாதது. ராவுத்தர் போர் புறாக்களைக் கத்தி காலில் கட்டி வாயில் மருந்து கொடுத்து சாராயம் கொடுத்து வீரியம் ஊட்டி போருக்கு அனுப்பவதில் வித்தகர். அதற்கென்று தனிக் கூடுகளும் மாடங்களும் வாழ்க்கை முறையும் உண்டு. ஒரு போர் புறாவின் விலை பதினாயிரம் வராகன். கிழக்கு சைபீரியாவில் இருந்து வரும் சாதுவான புறாக்கள் அவை. அவற்றை உருமாற்றி வீர சாகசத்திற்கு இளக்கி எடுப்பது ஆச்சரியமான பயிற்சி. அவருக்கு எந்த நேரமும் தலைக்குள்ளே புறாக்கள் சிறகடித்துக் கொண்டே இருக்கும். அவர் அரச குடும்பத்துக்கு மிக முக்கிய உறை வாள். மாலிக்காபூர் திண்டுக்கல்லில் இருந்து தஞ்சாவூருக்குப் படை எடுத்து சென்ற போது படையின் ரகசியங்களைப் புறாவின் மூலம் கண்டு பிடித்து கொடுத்தவர். முஸ்லீம்கள் பலர் தங்கியபோது பல தமிழர்கள் முஸ்லிம்களாக ஆனார்கள். நீல நிறக் கண்கள் உள்ள பட்டாணிப் பெண்கள் கோவை உதடுகள் கொண்ட ராவுத்தர்களுடன் கலந்தபோது தமிழ்ப் பெண்கள் பலர் விசுவாசிகள் ஆனார்கள். தாலியை விட்டு கருகமணி கட்டிக்கொண்டார்கள். ராவுத்தர் அப்போதும் புறாவிட்டுக் கொண்டுதான் இருந்தார். முஸ்லிம்கள் பலர் ஹஜ் போய்க் கொண்டிருந்தபோது காசீம் புனிதமான புறாக்களுடன் மல்லடித்துக் கொண்டிருந்தார். வானத்தைப் பார்க்கும் இவரது முகம் அரை நூற்றாண்டு காலமாக புறாக்களையே சுவாசித்து வந்தது. காசிம்பாய் ஒரு ஹராமி என்று முஸ்லிம்கள் சொன்னார்கள். காஷ்மீர் என்று மௌல்வி சொன்னார். ஆனால் புறாக்கள் அவருக்குக் கற்றுத் தந்தன. ரசூல் சல்லவரிக் குரல் வானமெங்கும் புறாக்கள் போலவும் பரவி கும்மிட்டு ஒலி சூழ்ந்தது. இது தேவ தூஷணம் போல தோன்றியது. ஆனால் ஐம்பது ஆண்டுகளாக மனிதர்களுடன் பழகுவதை விட புறாக்களைப் புரிந்து கொள்வதில் நேரம் செலுத்தி பழகி வந்த தெய்வீக மனிதரின் குரல் கனவு போன்ற அவரது கண்களும் சிவந்த உதடுகளும் இளமை மாறாத ஆண்மை புன்னகையும் நெடிய ஆறடி உயரமும் அனல் போன்று சூடு பிடிக்கும் அவரது ரத்தமும் எல்லாமே புறாக்களால் போஷிக்கப் பட்டவை. அவரது குரல் கேட்டு வானத்தில் பறக்கும் புறாக்கள் விர்றென்று திரும்பி அவரை நோக்கி பாய்ந்து வரும் விந்தை அவரது ரகசியம் இந்தப் புறாக்களுக்கு மட்டும் தெரியும். அடுத்து அவரது ஆணை எதையும் உடனடியாக நிறைவேற்றி விட்டுத்தான் அவை அடங்கும். நினைத்தால் அவரது எதிரியின் கண்களை நிமிடத்தில் குருடாக்கும். அந்த பாஷை அத்தனை வலுவானது. ஆணை அத்தனை அன்பு வடிவவானது. மனிதன் மீறி விடுவான்; புறா அவரது குரலுக்கு உயிர் கொடுக்கும் துணிவும் தியாக வீரமும் அந்த ஈரறிவு உயிருக்கு இருந்தது வியப்பல்ல.

ஆற்றோரமாக நடந்து கொண்டிருந்தார் காசீம். தஞ்சாவூரில் இருந்து பிரியும் வெள்ளாற்றுக் கரையில் வானத்தைப் பார்த்தபடி நடந்து கொண்டிருந்தார். தூரத்தில் ஆள் அரவம் அற்ற சோலை. இலை கொடி தழைகளுக்கு நடுவில் பெரும்பாலும் இடிந்த மினார் ஒன்று தெரிந்தது. அதில் ஏகப்பட்ட மாடங்கள். ஏராளமான குரங்குகளும் மணிப் புறாக்களும். காசிம்பாய் வெற்றிலைக் கொடிகளை நீக்கியபடி அந்த இடிந்த பள்ளிவாசலை லட்சியமாக்கி மரங்களிடையே நடந்தார். பழைய மன்னர் காலத்து பள்ளிவாசல். பக்கத்திலேயே புராதனமான கபர். பெரிய நீர்த்தடாகம். காடாக வளர்ந்து கிடக்கும் தாமரை இலைகள். நீர்ப்பரப்பில் மேலே தலை தூக்கி காற்றில் கவிந்தாடும் பெரிய சிவப்புத் தாமரைகள். ஆச்சர்யமான அழகு. நொய் என்ற தேனீக்கள் தாமரைப் பூக்களில் இரைச்சல். "ஹவ்வோ லக்கு உமா" என்று அவர் கூவினார். இரண்டாம் முறை அவர் கூவவில்லை. அவ்வளவுதான். நான்கு மினார்களின் மாடங்களில் இருந்த புறாக்கள் கங்கங்கங் என்று பெரும் இரைச்சல் வீசியபடியே அவரை நோக்கிப் பறந்து வந்து அவரது தோள்களிலும் ஜிப்பாவின்மீதும் தொப்பியின் மீதும் பச்சை உருமால் மீதும் அடுக்கடுக்காக வந்து பயமின்றி அமர்ந்த புறாக்களின் மணம். அவற்றின் இறகுகளின் மினுமினுப்பு. அவற்றின் ஓயாத பேச்சு. காசீம் மணிப்புறாக்களில் மூன்றினைத் தேர்ந்தெடுத்துப் பிடித்தார். சிறகடித்தபடி சம்மதத்துடன் அவரது தோள்களில் அமர்ந்தன.

மற்ற புறாக்களுக்கு ஊதிவிட்டார். சில புறாக்களைச் சொடுக்கிவிட்டார். சிலவற்றை இறகு பிரித்து வானத்தில் விட்டார். சந்தோஷமாக எல்லாப் புறாக்களும் பறந்து சென்றன.

தோளில் இருந்து மூன்று மணிப்புறாக்களோடு நடந்து வெளியே வந்தபோது பள்ளிவாசல் உள்ளேயிருந்து மெலிந்த நெடிய உருவம் ஒன்று அவரை நோக்கி வந்தபடியே பேசினார் ஆலங்கீர் மௌல்விசாஹிப்.

"ஊரு ரெண்டுபட்டு கெடக்கே பாபா. இஞ்ச பொறா புடிக்க ஏன் வந்திய? துனியா ரொம்ப கெட்டு போச்சி. ஜாக்ரதையா போங்க. ஆத்தங்கரையெல்லாம் பொம்பளை கொமர்களோட பொணம் கெடக்கு. யார் என்ன ஏதுன்னு யாரும் கேக்க முடியலை. நாயக்கர் காலமில்ல இது. முஸ்லிம்களுக்கு காலமில்ல தாதா. உங்களுக்கு இன்னும் பொறா ஷோக்கு உடமாட்டேங்குது. கவனமா போங்க" என்றார் ஆலம் பக்கீர்.

லேசாகச் சிரித்தபடி புறாக்களை ஒவ்வொன்றாக "ஜாவ்ரே! ஜாவ்லாகூ! நான் வர்றவரைக்கும் அரண்மனைப் பள்ளிவாசல் மினார்ல இருங்க. பின்னாலேயே வந்திர்றேன்" என்றபடியே பறக்கவிட்டார்.

"ஆலம் சாஹிப். படச்சவன் இருக்கும்போது என்ன பயம்? அவன் எங்கும் இருக்கான் பாய். அவனை மீறி எதுவும் இல்ல. யாரை நம்பி நம்ம அப்பன் பாட்டன்மார் இஞ்ச வந்தாங்க. அல்லா அவுகளை தஞ்சாவூர்ல பாலைவனத்துல இருந்து எந்த தைரியத்துல கொண்டாந்து சேர்த்தாராம். தஞ்சாவூருக்கு வர முந்தி என் பாட்டன் பூட்டான்மார் அரேபியாவில் இருந்து

மேனாவிலேயும் பல்லக்குலேயும் வந்தாக. நடந்து நடந்து நடந்தே பாலைவனத்துல இருந்து ஆப்கானிஸ்தான் பலூஜிஸ்தான் ராஜஸ்தான் எல்லாம் நடந்து நடந்து நடக்கும்போதே பலுகி பெருகி நடக்கும்போது படிச்சி, நடக்கும்போதே வேட்டையாடி சாப்பிட்டு, நடக்கும்போதே தனியா என்னென்ன படிச்சிக்கிட்டு நடக்கும்போதே மருந்து செடியெல்லாம் பறிச்சி வைத்தியம் யுனானி எல்லாம் செஞ்சுகிட்டு நடந்துகிட்டே சண்டைபோட்டு சேந்தவங்களையெல்லாம் முஸ்லீம் ஆக்கிகிட்டு யாருகிட்டயும் வேத்து வாசனை நேராம நேராம கூட்டம் கூட்டமா புள்ளை குமர்களைப் பெத்தெடுத்து திடீர்னு இஞ்ச பாளையம் எறங்கினாங்களே. ஆரெக் கேட்டு? ஆரு சொன்னா? முன்னூறு வருஷமா இஞ்ச தொழுகையும் ஸவ்வாத்தும் து ஆவும் செய்யலியா? பொழுது விடியலியா? சாஹிபு. பைத்தியம் மாதிரி பயப்படாதிக. எந்தக் காலமும் நிலையானது இல்ல சாஹிப். எவனும் நிக்கிறதில்லெ. ரத்தம் தெளிவா இருக்கிற வரைக்குதான் எல்லாம். ரத்தம் கலங்கினால் - கலந்து கொட்ட வேண்டியதுதான். துனியாவுல இதெல்லாம் பாத்து பயப்பட என்ன இருக்கு. ஆலம் சாஹிப் ஒங்க பத்து கொமருகளையும் காவு கொடுக்கலியா? படச்ச அல்லா இருக்கான். என்னைக்கும் இதெல்லாம் இப்படியேதான் இருக்கும். கொஞ்சநாள் ஆட்டம்! அப்றம் மர்கயா! யாரு எப்படி போனா என்ன? நீங்க பாக்காததா?'' என்றார் காசீம்.

அந்தப் பள்ளிவாசலுக்குப் புறாவைத் தவிர வேறு யார் வருவான்கள் காசீம்பாய் தவிர. வெள்ளாறு சலசலத்து ஓடிக் கொண்டிருந்தது அவர் பேச்சு போல. ஆலங்கீர்சாஹிப் கீழே குனிந்தபடி சற்று நேரம் யோசித்தார். அதே நேரத்தில் திமுதிமுவென்று யாரோ சோலை இருளில் ஓடி வருவதும் துரத்தி வருவதும் புரிந்தது. கூச்சல் ''பிடிபிடி. அவளை விடாதே'' என்ற சப்த கோலங்கள்.

ஆம் நெற்றியில் நீண்ட கறுப்பு கோபி நாமம் இட்ட கன்னடச் சாயல் பொங்கும் இளம் பெண் ஒருத்தி, கழுத்தில் கறுப்பும் மஞ்சளும் ஆன தந்தமாலையும் வைரச் சங்கிலியும் தொங்கின. தொடைகள் துலாம்பரமாகத் தெரிய சுங்குவிட்டு பின் கொசுவம் வைத்து கட்டிய புடவைக்கட்டு. பட்டுச் சீலையின் மினுமினுப்புமாக அபாரமான அழகு. பின்னால் குதிரையில் அரண்மனை மராட்டிய வீரர்கள் பதினாறு பேர் கையில் குந்தம் குலுங்கும் பித்தளை விலங்கு. இமைக்கும் நேரத்தில், ''மாப் கரோஜி. என்னைக் காப்பாத்துங்க என்னை காப்பாத்துகங்க டேரோ'' என்றாள்.

அந்தச் சிறுமி வெண்மையான செழுமையான அவளது துடைகளும் மேலே சொக்காப் போடாத தோள்களும் அற்புதமான நயம் பேசியது. அந்த இருளிலும் ஒளி. ஒரே நிமிட்ம்தான். ஆலம்சாய்பு அவள் கையைப் பிடித்து காசீமிடம் ஒப்படைத்து, ''உள்ற போங்க. நான் பாத்துக்கிறேன். காப்பாத்து'' என்றார்.

அதற்குள் பள்ளிவாசல் தோட்டத்துக்குள் பதினாறு குதிரைகளுடன் ஏகப்பட்ட சத்தம். காலாட்கள் வேறு. தாடிகள், கூரான மீசைகள் தொப்பிகள்.

ஒருவன், ''கியாபாத் அவரத் கஹாம் ஹை? அவள் எங்கே'' வந்தவன் உள்ளே போனான்.

பள்ளிவாசலில் புறாக்களின் கும்மல் சத்தம் மட்டும் மினார்களில் லேசான சஞ்சலத்துடன் சிறகடிப்புடன் கேட்டது. ஆபத்து அவைகளுக்குப் புரிந்து விட்டிருந்தது.

சிப்பாய்கள் பள்ளி வாசல் உள்ளேயும் வெளியேயும் மினார்களிலும் சுற்றிலும் உள்ள சோலையிலும் தேடி அலசியும் பயனில்லை. யாரையும் காணோம்.

காசீம் ராவுத்தர் புறாவைப் போல பறந்தது என்ன மறிமாயமோ. இமைக்கும் நேரத்தில் எங்கே போனார்.

(முடிவுறாத கதை)

